REGISTERED—No. M. 108.

"His Royal Highness desires me to express to Mr. Swaminatha Aiyar his best thanks"—Sir Francis (now Lord) Knollys.

Vol. XVIII.] DECEMBER 1910. [No. 9.

லேசான காகிதப் பதிப்பு.
தனிப்பிரதி, 5 அணா.
பழைய பிரதி, 6 அணா.

சந்தா விலை விபரம்.
ஒரு வருஷத்திற்கு ரு. 4.
ஆறுமாதத்திற்கு ,, 2-2.




அறிவைப் பரவச் செய்வதற்கான மாதாந்தரத் தமிழ்ப்பத்திரிகை.

**DEVOTED TO PRACTICAL TRUTH AND KNOWLEDGE.**

அறிவுடையாரெல்லாமுடையாரறிவிலா
ரென்னுடைய ரேனுமிலர்.-திருக்குறள்.

A POPULAR NEW REVIEW AND TAMIL MONTHLY, ESTD. MAY, 1892.

கற்க கசடறக் கற்பவை கற்றபி
னிற்க வதற்குத் தக.—திருக்குறள்

ILLUSTRATING THE PRINCIPLES OF EDUCATION, PSYCHOLOGY, SOUL-CULTURE & ETHICS.
**ADAPTED FOR USE IN HOMES & SCHOOLS.**

["Hitch Your Wagon to a Star"—Emerson.]

## CONTENTS.



அட்டவணை.



["Our Taoism is the Purification of the Human Mind"—Emerson.]

[Thick Paper Edition for Patrons.] PUBLISHED BY [Minimum Subscription Rs. 5.
**THE SECRETARY, DIFFUSION OF KNOWLEDGE AGENCY,**
[Overland 8 Annas extra.] *Lalitalaya, Mylapore, Madras, S.* [Overland 8 Annas extra.
**For the Viveka Chintamani Publishing Committee.**
[Thin Paper Edition for the people.] *(Copyright Registered)* [Subscription Price: Yearly Rs. 4

*Like a spider, like the earth, and like a living creature He produces the Universe."—Sruti.*

# THE VIVEKA CHINTAMANI.

ESTABLISHED 1892.

The Oldest and the Best Tamil Monthly: Yearly Rs. 4.

Thick Paper Edition Rs. 5. in Advance.

Subscriptions registered by Volume only and cannot be discontinued in the middle of a Volume.

**EDITOR** — **LALITALAYA, MYLAPORE.**

**C. V. Swaminatha Aiyar.** — *Madras, S. Septr. 191*

---

# விவேகசிந்தாமணி.

வருஷசந்தா ரூ. 4, வாலியம் கணக்காகவே சந்தா பதிவுசெய்யப்படும்.

## விவேகசிந்தாமணிக் கமிட்டி விண்ணப்பம்.

ஆரிய சகோதரர்களே! விவேகசிந்தாமணி, இப்பொழுது மாதந்தோறும் ஒழுங்கா வெளியாகி வருகிறது. ஸாதாரண வருஷ முதல் மிகவும் அருமையான விஷயங்களெல்லா வெளியாகிவருகின்றன. ஸித்தர்கள் ஸாதநமுறை, யோகம், பக்தி, ஞானம் முதலான ஸா முறைகள் உபநிஷத் வாக்கியார்த்தம் இவை வெளியாகிவருகின்றன. விவேகசிந்தாம யென்ற பெயர்க்கேற்றபடி இதில் விவேகத்தை விளைவிக்கக்கூடிய அற்புத விஷயங்கள் நிறை திருக்கும். இக்காலத்துக்கேற்றபடி தேசாபிமானம், பாஷாஞானம், நீதி போதம், வேதாந் சாரம், சுதேச விதேச சரித்திரங்கள், மஹாத்மாக்களின் அமிருத வசனங்கள் பகவான் அர்ச்சுனனுக்குப் போதித்த சித்தியானுகூல ஸாதனங்கள், அப்போதப்போது நடக்கும் விசேஷ ஸம்பவங்கள், ஆகிய இவைகள் அடங்கப்பெற்றுச் செந்தமிழ் நடையில் எழுதப்பட்டுத் தமி நாடெல்லாம் ஜ்வலித்துவருகிறது. இப்பாசாந்தப் பத்திரிகைக்கு ஒவ்வொருவரும் சந்தாதா ராகச்சேர்வதுடன் தங்கள் நேசர்களுக்கும் காட்டி அவர்களையும் வாங்கும்படி செய்து ஆதரித்து வரக்கோருகிறோம். மனிதர்களுக்கு உய்யும்வழிகாட்டி அவர்களைக் கடைத்தேறச் செய்யு உண்மையான ஸத்குருவைப்போல விவேகசிந்தாமணியை வாசிப்பவர்களுக்கு அது உற்றவிடத் துதவியாய் நின்று விவேகத்தை வளர்க்கும் குருவாய்த்தோற்று மென்பதிற் சிறிதும் சந்தே மில்லை. பத்திரிகையை முழுதும் படித்துக் கையொப்பக் காரர்களாய்ச் சேரவும், இதரர்களை அப்படியே சேரும்படி செய்யவும் கேட்டுக்கொள்கிறோம். இப்பத்திரிகையை வாங்கி வாசி போர் இகபர சாதனங்களிரண்டிலுந் தேறிப் பெறு வாழ்வெய்துவர். சன்மார்க்க சாதனமான பத்திரிகையென்றும் விவேக விருத்திக்கின்றியமையாததென்றும் அநேகர் அதை ஆதரித்துக் கொண்டாடிவருகிறார்கள். பத்திராசிரியருக்கும் பத்திரிகைக்கும் அர்பத்நட் கம்பெனி முழுகி போனதில் நேர்ந்த பெருநஷ்டத்தால் செலவுக்குவேண்டிய அளவே காபிகளச்சிடப்படுவதால் வேண்டுவோர் உடனே யெழுதிப் பெற்றுக்கொள்ளவேண்டும்.

1910ஸு ஏப்ரல் - மே முதல் 18-வது வால்யம் ஆரம்பம்.

சி. வி. ஸ்வாமிநா தய்யர்,
பத்திராசிரியர்.

எம். கே. நாராயணஸ்வாமி ஐயர், பி-ஏ., பி-எல்.
விவேகசிந்தாமணிக்கமிட்டி காரியதரிசி.

ஐயா,

## ORDER FORM.

Please enrol me as a Subscriber and send the Vivekachintamani by V. P. P. f year's subscription, viz, Rs. 4-1-0.

ஐயா, விவேகசிந்தாமணிக்கு என்னையும் ஒரு சந்தாதாரராகச் சேர்த்துக்கொண்டு முதல் சஞ்சிகையை ஒ வருஷ சந்தா ரூபா 4-1-க்கு V. P. P. மூலமாக அனுப்பக் கோருகிறேன். தவறாமல் தபாலாபீஸில் பண கட்டிப் பெற்றுக்கொள்கிறேன்.

பேர், தொழில், ஊர் விலாசம், போஸ்ட் இவைகளை கண்டெழுதவும்.

☞ தனிப்பிரதி ஒற்றைச்சஞ்சிகையானால் அணா $5\frac{1}{2}$, இரட்டை சஞ்சிகையானால் அணா 10 அனுப்பவும்.

"Give me not O God, that blind, fool faith in my friend, that sees no evil where evil is, but give me, O God, that sublime belief that seeing evil I yet have faith."

"Seek Truth wherever you can find it." But,

"Make your choice and stick to it till you reach the End."

ஸத்தியம் வத—SPEAK THE TRUTH.

"HITCH YOUR WAGON TO A STAR." "TO THINE OWN SELF BE TRUE."



அன்பேயவன்: அறிவேசக்தி: ஓம் தத்ஸத்] [God is Love: Knowledge is Power: Aum

ஸத்தியமே ஜெயம்—SATYAMEVA JAYATI.

புத்தகம். 18.] 1910ஞ டிசம்பர்மீ, சாதாரண ஞ மார்கழிமீ [சஞ்சிகை. 9.

# KHANDA-YOG, OR ABSOLUTE MIND-CONTROL.

## To Sri Chinna-musta Vidyesvari,

### OR, THE BEHEADED YET LIVING FORM OF LOVE SUPERN.

"Truth is Beauty: Beauty is Truth. That is all
You know on earth, and all ye need to know."—*Keats.*

I

When Love to Beauty wed,
By Beauty is embracing led,—
Love and Beauty in Eternal Union knit
So rise up in flourishing form well-knit
That the life-current in triple-stream flowing,
Into its tripartite contents divided are glowing
Each running its course in high torrents tossed
Until its form in a ghost representing its own self is lost.

II

Thus the *pitta-nâdy* in a ray of Light is lost ;
While the *sleshma-nady* 's in a ray of Darkness tossed ;
Between the two is Love and Beauty's well-knit form
Which with its head cut off the body still lives in form !
For the life-current from its source in body rising, still flows through it;
Though cut in twain the head and trunk by the life-current true is still through knit
Thus the moral of Love inspired by Beauty's strength
The immortal picture of *Chinna-musta* portrays at length !
*Aum Sri Chinna-Musta Vidyesvariaii Namah!*

# கண்டயோகம்

## அல்லது "மனமிறக்கக் கற்றல்"

"மனமிறக்கக் கல்லார்க்குவாயேன்
பராபரமே!"—தாயுமானவர்.

"கண்டம்" என்றால் இரண்டு பட்டுப்போனது என்ற அர்த்தம்: வெட்டப்பட்டது என்றும் சொல்லலாம். ஸம்ஸ்கிருதத்தில் "சின்னம்" என்றாலும் சேதிக்கப்பட்டது, அதாவது கண்டம் என்றே அர்த்தம் கொள்ளும். தச வித்யைகளில் ஒன்றுக்குச் 'சின்னமஸ்தா" என்று பேர். அப்படியென்றால் சேதிக்கப்பட்ட தலையையுடையவள் என்று அர்த்தம். அஷ்டதள கமலத்தின் கர்ணிகையில் பரமசிவனால் தஹிக்கப்பட்டுப் பிறகு பண்டாசுரனாகி ஸ்ரீதேவியினால் காமேசுவராஸ்திரத்தினால் ஸம்ஹரிக்கப்பட்டபின், அபின்னசக்தியான லலிதாம்பாளின் வரப்பிரசாதத்தினால் ரதிதேவி மாங்கல்ய பிக்ஷைபெற்று அவளுக்குமட்டும் உருவாய்த் தோன்றும்படி அனுக்ரகிக்கப்பட்ட மன்மதனைப் பெற்றபின் "கண்ணிழந்து 'பெற்றான்" போல் கணவனையிழந்து பின்னும் பெற்ற பாக்கியவதியான ரதிதேவியானவள் அழகே யுருவாயமர்ந்துள்ள தான், காமேசுவராஸ்திரம் பட்டு விழுந்து பின்னுயிர்பெற்ற மஹிமையினால் ஆசைநோய் தீர்ந்து அன்பே யுருவாயமர்ந்த காமேசுவரரைப்போலுமுள்ள காமதேவனைக் கட்டியணைந்து மனத்தோடு மனம்பொருந்த முகத்தோடு முகம்வைத்துக் கிரீடிக்க, அழகே யுருவெடுத்து அன்பைத் தழுவினதுபோலும், "கமலாம்பாள் சரித்திரத்தில்" அரசைமாத்தைத் தழுவினின்ற முல்லைக்கொடியின் அழகைப்பார்த்து அதில் மனம் லயித்திருந்த ஸ்ரீனிவாஸனை முல்லைக்கொடிபோலும் தழுவி நின்ற லக்ஷ்மியைப்போலும் காமனும் ரதியும் கலந்தோர் கள்ளிலிருந்து எழுந்ததோர் மதுவின் குதூஹலப்போலச் "சின்னமஸ்தாவித்யேசுவரி" யென்னும் "ஜ்யோதிரந்தர்க்கதம்மனஃ" என்று சுருதிபாடிய கீர்த்திபெற்ற வித்யேசுவரியானவள் உதய சூரியன்போல் தன் திருமேனி விளங்க எழுந்தருளி காமனைத்தழுவிய ரதியின் பிருஷ்டத்தில் ஒருகாலும் தோள்பட்டையிலொருகாலுமாய் திவ்ய நிருத்த கோலாகலத்தோடு எழுந்தருளி "சிருஷ்டி ஸ்திதி வ்யஸன கர்மகிருத்" என்ற சுருதி வாக்கியப்படி சிருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரமாகிய முத்தொழிலையும் லீலையாக வியற்றிக் கடைசியில் தானும் லயமடைந்து விஷ்ணு ஸ்வரூபமாக விளங்கும் அதிரஹஸ்ய உண்மையைப் பக்த 'கோடிகளுக்குள்ளபடி யுணர்த்துவான் பார் முதற்பூதமெல்லா மழித்துப் பசிதாஹங்களைத் துவம்ஸம்செய்து பித்த

வாத சிலேஷ்மங்களின் சையோக ரூபமாக விளங்கும் ஜீவநாடியையும் அதன் த்ரிகுணம் விளங்கப் பிரித்து பித்தநாடியை அதன் ஸ்வரூபாத்மகமான ஜோதிக்கிரணத்தின் பிரதிபாஸமானதோர் யோகினி ரூபத்திலும் சிலேஷ்மநாடியையும் அப்படியே அதன் ஸ்வரூபாத்மகமான அந்தகாரத்தின் பிரதிபாஸமானதோர் யோகினி ரூபத்திலும் ஒடுங்கச் செய்து, மிஞ்சிநின்ற வாதநாடியொன்றுதானும் பிரஜ்ஞான ஸ்வரூபமான தன் மஸ்தத்தில் ஒடுங்கும்படிச்செய்து அது அப்படியே ஒடுங்கி நிற்பதின் உண்மையை யோகசித்தர்களுக்குக் கரதலாமலகமாய்க் காட்டக் கிருபை கூர்ந்து பிரபஞ்ச ஸம்ஹாரஞ்செய்த தன் (ஞான) வாளால் தானே தனது கழுத்தையரிந்து இடது கையில் தாங்கிக்கொண்டு, பித்த வாத சிலேஷ்ம நாடிகள் ஜீவநாடியிலிருந்து பிரிந்து செரிந்து ஒடுங்கும் உண்மையைக் காட்டி நிற்கிறாள். இந்த அதிரஹஸ்யமான யோக ரஹஸ்யத்தை அஹம்புற மொக்க அன்பிணுணர்த்திய என் தாயாம் ஸ்ரீ சின்னமஸ்தா வித்யேசுவரியைச் சரணம் சரணமென்று அவள் திருவடி சரண்புகுந்து அவள் அருளால் அருளிய உண்மையை அருள்நிறைந்த மனத்தின் தெருளாலுணர்ந்து தெரிந்ததைத் தெரிந்தபடி தெளிவுடனுரைக்க ஸ்ரீ குருவைப் பணிந்தடைந்து துதித்து நிற்கிறோம்.

"சந்ததமும் என்நாவில் வந்துதவி செய்யுமம்மா
சாயாம்பூ ஸரஸ்வதியே ச்யாமளையே—
தக்ஷிணாமூர்த்தியே ஸ்ரீ குருயோகியே
சுவாமின் சமாதிகொளுவோ!"

"அஞ்ஞான விருள்பிரிந்து அருவருணோதயமாகின்
விஞ்ஞான சூரியன் உதித்தார்— [றது
ஜாக்ர ஸ்வப்ன சுஷுப்தியென்ற இராத்திரி மூன்
[றுங்கழிந்து
ஸ்வானுபோகோதயமானேன் ஐயாவே!"

"உபதேசதாரகக் கிருபையான அருக்கன் உதித்தவுடன்
ததாகாரமான வெளியானேன் ஐயாவே
தக்ஷிணாமூர்த்தியே ஸ்ரீகுருயோகியே
ஸ்வாமின்ஸமாதிகொளுவோ!"

## பசுயஜ்ஞம்.

ஜீவேச்வரனென்றதீக்ஷிதரும் அத்வர்யுவும்
சின்மாத்ர யாகம்பண்ண தீக்ஷைவகித்து
ஆகாம்ய ஸஞ்சித வர்ணாச்ரமங்களென்ற
நாமரூபகர்மப் பிராரப்த பசுவை

ஞானமென்றபரசுவினால்கண்டம்கண்டமாய்த் துணித்து
ஜோதியாரும்வபையையெடுத்து
ஞானயோக சமாதியினால் பிரபலாக்னி வளர்த்து
பரிபக்குவமாகச்சமைத்து,—

புண்யபாவங்களென்றஆச்சியந்தனைச்சொரிந்து
புரோடாஸ பிண்டஹவிஷை
அகண்டாகாரமென்றஅக்கினிகுண்டத்தில்
ராஜயோகஅத்வர்யர்கள்சூழ—

ஹம்ஸோஹம்ஸோஹமென்று அவயமிட்டுச்கோஷமாய்
ஆஹுதிகள்பண்ணிநிற்கிறாள்
தக்ஷிணாமூர்த்தியேஸ்ரீகுருயோகியே
ஸ்வாமின்ஸமாதிகொளுவோ!

ஸ்ரீ சின்னமஸ்தா வித்யேசுவரி ஜீவநாடியைப்பிரித்துப் பிராண நாடியைப் பிரஜ்ஞான கனஸ்வரூபியான தன்னில் ஒடுங்கப் புசித்து, பசுயஜ்ஞம் செய்யும் பரம ரகஸியத்தை "மஹாத்துக்கள், பிரஹ்மநிஷ்டாள், பாலவிருத்தாள், மஹாயோகி, குரு ஸ்வாமியின் தெரிசனந்தேடி நிற்கின்றார்கள்" என்றுணர்ந்து பிராணனைப் பிரஜ்ஞானத்திலொடுக்கி, பிரஜ்ஞானம் பிரஹ்மமாகத், தான் அகண்டாகார லக்ஷ்மியாகி குருஸ்வாமியின் ஐக்கியபோகம் அநுபவித்து நிற்பதை பரமார்த்த மிழந்த பாமரர்களுக்குரைப்பதெப்படி?

அஷ்டதள மலராமந்த ஸ்வாதிஷ்டான சக்கிரத்தில் கமலகர்ணிகையின்மேலே வாஸனா சரீரத்தோடு காமனும் ரதியும் சேர்ந்த கலவியில் தானுதித்து பாலசூரியனைப் போன்ற காந்தியுடன் விளங்கா நின்ற "வித்தியாசரீரியாம்" தேஜோமனமதனைப்பூஜிக்கும் வழியுரைப்பான் "சின்னமஸ்தா" தானுதித்தாள். கண்டஸ்தானத்தில் வாயுசக்கிர மிருப்பதாலும், வாயுவினம்சமான மனம் கண்டஸ்தானத்திலிருப்

பதாலும், கண்டம் (கழுத்து) சுத்த தத்துவமான மஸ்தகத்துக்கும் (தலைக்கும்) மிச்ர தத்துவமான உடலுக்கும் மத்தியிலிருப்பதால், அகண்ட பரிபூரணமான இரண்டற்ற பரம்பொருளைக் கண்டமாக்கிச் சின்னமாகவும் பின்னமாகவும் காட்டி ஈசுவரனுடைய மாயா சக்தியினால் நாமரூப பேதங்களான பிரபஞ்சமாம் (தோற்ற மாத்திரமான) உலகை உண்டுபண்ணிக் காத்தழித்து லீலைபுரிகின்றது. இப்படி விளையாடிக் கொண்டிருக்கும் மனதைக் கண்டித்து (நிரோதனம் செய்து) அதன் சித்தவிருத்தியைத் தடுத்து நிவிருத்தி மார்க்க ஏகாக்ர சித்தத்தில் செல்லப் பழக்குவதே யோகமாம். இதைப் பதஞ்சலி பகவான் "யோகம் சித்தவிருத்தி நிரோதனம்" என்னும் சூத்திரத்தால் வெகு அழகாய்ச் சூசிப்பித்துச் சொல்லியிருக்கிறார். இந்தச் சித்தவிருத்திநிரோதனம் செய்ய மனதைப் பிடித்தல்லவோ அதை யடக்கல் வேண்டும்? மலடிமகனை யெங்குதேடிப் பிடிக்கிறது? அநிர்வாச்சியமான மனதைப் பிடிக்கும் வழி யெப்படி? இதற்காக ஒரு தந்திரம் செய்தார்கள்; "மனம் ஒருவழிப்பட்டது மந்திரம்" என்று இருப்பதால் அந்த "ஒருவழி' தானும் எது என்று கேட்கும் தேஹபாவம் நழுவாத சிஷ்யனுக்கு கண்டத்தைக் குறிப்பாய் (லக்ஷியமாய்)ச் சொன்னார். மஹாதந்திர ஸ்வரூபியான ஸ்ரீகுரு கண்டத்தைப்பற்றி அதைத் துண்டித்துப் பார்த்தால் மனதின் ஸ்வரூபம் தெரியும்! அப்படி யென்றால் என்ன? கழுத்தை யறுத்துக்கொண்டால் மனதை யறியலாமென்றாகிறது! கழுத்தை யறுத்துக்கொண்டால் பிராணன் கூட்டைவிட்டுப் போய்விடுமே யென்கிற சங்கைளெம்ப, கழுத்தை யறுத்தாலும் பிராணன் கூட்டை விட்டுப் பிரியாதபடி யொரு தந்த்ரம் செய்யக் கற்பித்தார். அந்தக் கற்பிதயோகமே ஹடயோகம். ஹகாரமாகிய சூரியனையும் டகாரமான சந்திரனையும் தேஹத்தில்—பிரித்துக் கூட்டும் சக்தியுண்டானால் பிராணன் கூட்டை விட்டுப் பிரியாது எல்லா ஹடமும் சாதிக்கலாமென்றார். சரீரத்தில் சூரியசந்திர அம்சங்களாக விளங்கும் பிங்கலை, இடா என்கிற நாடிகளைப் பிரித்துச் சேர்க்கும் வகையை உபதேசிக்குமாறு ஹடயோக சாதனங்களை யுபதேசிக்கலானார். இந்த ஹடயோகத்தில் லயயோகமும், லயயோகத்தில் மந்திர யோகமும் அடங்கும். மனதை மந்தர யோகத்தால் ஒரு வழிப்படுத்தி, ஒரு வழிப்பட்ட மனத்தை லயயோகத்தால் கட்டி மூர்ச்சிக்கச் செய்து, லயயோக சமாதியப்பியாசத்தால் மூர்ச்சை தெளிந்து பிரஜ்ஞையுண்டாகும் வரையில் லயயோகத்தை அப்பியசித்து சித்திபெற்றுப் பின்னர், "நாடிதாரணை, வாயுதாரணை, அங்கிதாரணை, அமுததாரணை" யென்னு மிவைகளால் நாடிவழக்கம், வாயுவழக்கமறிந்து, அங்கிதாரணையால் சிவனைப் பூசித்து, அமுததாரணையினால் சக்தியை வசப்படுத்திக் கொண்டால், "கேவலகும்பகம்" என்கிற ஹடயோகசித்தி கைகூடி வரும். இந்தக் கேவலகும்பகம் என்னும் ஹடயோக ஸித்தி கூடினால், ராஜயோகஞ்செய்ய யோக்கியனாவன்.

கண்டத்திலுள்ள தஹராகாசத்தைத் தியானித்தால், சித்தம் என்பது இன்னதென்றும், இத்தன்மையதென்றும் தெரியவரும், சித்தம் என்பதை யறிந்தால் சித்தவிருத்தியே மனமாகையால், மனதையும் அதனால் அறியலாம். "சித்தவிருத்தி நிரோதனமே" யோகமாதலால், யோகத்தையும் அறியலாம். சித்தம் என்பது குயவன் பட்டடையிலுள்ள பக்குவம் செய்யப்பட்ட மண்ணுக்குவமேயமாகக் கொண்டால், மனம் என்பது அந்த மண்ணேற்றிய திருகை அல்லது சக்கரமாம். யோகம் என்பது அம்மண்ணை உருவாக்கும் குயவனுடைய கைச்சாமர்த்தியமாம். இப்படியாக உபாதான காரணம் (Material Cause,) கருவிகாரணம் (Instrumental Cause), கர்த்தாகாரணம் (Efficient Cause), என

மூன்றுவித காரணங்களின் ஞானமும் கண்ட யோகத்தால் சித்திக்கிறது. திரிவிதமான காரணத்தை யறிந்தால் யோக சம்யமத்தாலே காரணகாரிய தோரணைபற்றி விசாரித்துக்கொண்டேபோய் முதற்காரணமான ஆதிபராசக்தியை அறியலாம். இதுவரையில் தான் யோகம் பயன்படும். ஆதிபராசக்தி பின்னமாயும் அபின்னமாயுமிருந்து விளங்குவதை ஞானயோகத்தால் அறிந்து அனுபவிக்கவேண்டும். "அறிவழிந்த சுகமதனை யனுபவித்தே யறியவேண்டும்." திரிபுடிஞானம்வரையில்தான் யோகம் செல்லும். திரிபுடி ரஹிதமான அகண்டாகார ஞானம் தற்போத அழிவினாலேயே சித்திக்கவேண்டுமாகையாலும் அந்த தற்போத அழிவும் அருள் நிறைவாலேயன்றி வேறுவிதத்தால் சிந்திக்காமையாலும், "அவனருளே கண்ணாகக் காணினல்லால்" வேறு விதமாக எழுதியும் சுட்டியும் காட்டவொண்ணாது என்று அப்பர் ஸ்வாமிகளும் மற்ற எல்லா ஸ்வாநுபவச் செல்வர்களும் குறிப்பிட்டுப் பாடியிருக்கிறார்கள்.

தற்போத அழிவை "ஒழுவிலொடுக்கம்" என்றும், "மனமிறத்தல்" என்றும், "கண்டயோகம்" என்றும், ஸ்தூலபாவனையில் "கழுத்தையறுத்துக்கொள்ளல்" என்றும் பலவிதமாச் சொல்வதுண்டு. "தன்மனோ விலயம் யாதி" யென்ற சுருதிவாக்கியத்தின் லக்ஷியார்த்தம் எதுவோ அஃதொன்றையே இவையெல்லாம் சுட்டிக்காட்டும். ஆகவே தன் தலையை யறுத்து இடதுகையில் வைத்துக்கொண்டு வாதநாடியாம் பிராணனைப் புசித்துக்கொண்டு, பித்தநாடியை நாத தத்துவத்தை விளக்குமோர் யோகினியுண்ண, சிலேஷ்மநாடியைப் பூததத்துவத்தை யொடுக்கும் ஒரு யோகினி யுண்ண விளங்கும் ஸ்ரீ சின்னமஸ்தாவித்யேசுவரியின் தரிசனம் கிடைக்கப் பெற்ற நாம் அவளுடைய ரஹஸியோபதேசத்தையும் அவள் திருவுருவத்தின் இரஹஸியார்த்தத்தையும் உண்மைப் பக்தர்களும் உத்தமயோகிகளும் உணர்ந்துய்யுமாறு அவளது திருவருள் தூண்டத் தெவிட்டாத் தேன்கட்டியொத்த அவள் இன்சுவையுணர்ந்த வுணர்வினின்றும் உள்ளத்தாராய்ச்சியால் கதித்தெழுந்த கனவு நனவழிந்ததோர் துரியாவஸ்தையில் கண்டது கண்டபடி "உரையற்ற தொன்றை யுரைசெய்யும் ஊமர்கள்" வழிபற்றிச் சொல்லாது சொல்லிச் சூசிப்பித்தோம். ஸ்ரீ சுந்தரமூர்த்தி ஸ்வாமிகள் ஸ்வாமிக்கும் அம்மனுக்கும் ராசி செய்யத் துணிந்து அது பலிக்காதபோது கழுத்தை யறுத்துக் கொள்வதாக பாவனைகாட்டி ஆலயங்களில் நடந்து வரும் ஐதிகம் கவனிக்கத்தக்கது. பிராணன் போகாமல் கழுத்தை யறுத்துக்கொண்டால் கண்ட துண்டமான பிரபஞ்சஞானம் அகண்டாகாரமாக விளங்கும். அகண்டாகார விருத்தியில் பேதபாவனைக் கிடமில்லையால் ஸ்வாமி யம்மன் என்கிற த்வைத பாவனையிலுண்டான ஊடல் த்வைதபாவனைக்கிடமான "மனம் இறக்கவும்" இருக்க இடமற்றுத் தானே தீர்ந்துபோம். இந்த வுண்மையையே தாயுமானஸ்வாமிகள் "மனமிறக்கக் கல்லாதார்க்கு வாயேன் பராபரமே!" யென்று பாடியிருக்கிறார். மனமிறந்தால் எல்லா சுகமும் சித்திக்கும். ஆகையால் மனமிறக்கக்கற்ற மாண்புடையெல்லாரும் உலகத்தாரை நல்வழிப் பட்டுய்யவேண்டி கூவாமற் கூவியழைக்கும் வண்மையாயிருக்கிறார்கள். அவர்கள் குரலோசை "சந்தையிரைச்சலிலே" குடியிருக்கும் ஜகத்தாருக்குக் காதில் நுழைவதில்லை பாவம்! இதற்கு என் செய்யலாம!

காடுமேடெல்லாம் கால்விட்டோடும் மனத்தின்பிறகே யோடியலுத்த மன்னுயிரைத்தாயுமானவர் பின்வருகிறபடி கூவி யழைக்கிறார்:—

"காடுங் கரையு மனக்குரங்கு
  கால்விட் டோட வதன்பிறகே
யோடுந் தொழிலாற் பயனுளதோ!
  ஒன்றாய்ப் பலவா யுயிர்க்குயிராய்
ஆடுங் கருணைப் பரஞ்சோதி
  யருளைப் பெறுதற் கன்புநிலை
தேடும் பருவ மிதுகண்டீர்
  சேர வாரும் சகத்தீரே!"

"காக முறவு கலந்துண்ணக்
கண்டீ ரகண்டா காரசிவ
போக மெனும்பே ரின்பவெள்ளம்
பொங்கித் ததும்பிப் பூரணமா
யேக வுருவாய்க் கிடக்குதையோ
வின்புற் றிடநா மினியெடுத்த
தேகம் விழுமுன் புசிப்பதற்குச்
சேர வாரும் சகத்தீரே!"

ஓம்தத்ஸத்.

---

## The Supplicating Voice and the Responsive Echoe.

### தேவி பிரச்னோத்தரம்.

(ஞானவாசிஷ்டம்—"தேவியுத்தரம்.")

"ஒருவருக்குநா மொன்றும் நல்கிலம்
உணர்வின்வண்ணமே யுயிர்களெய்துமாற்
கருதிமுந்திநீ கதிவிரும்பினுய்
காதலித்தசிற் கண்ணளித்தனம்!
பெருகுகாதலா லிந்தவண்ணமிப்
பேதைவேண்டவிப் பேறுநல்கினம்!
ஹிருதயத்திலே நினைந்தலெய்திடும்
எமதுபார்வையால் யார்க்குமென்றனள்."

—லீலைகதை.

பிரச்னை (27-10-10)

"ஸ்ரீமத் சுவாமிகள் திவ்ய தரிசனைக்கு அநேகம் முறை வந்தும் கிடைக்கவில்லை. அடியனுங் கிருதார்த்தனாகும் வண்ணம் இன்னும் சுவாமிகள் அடைந்த பேரின்ப நிலையை எளியனுந் தெளியுமாறு, அவ்விடத்திற் றுத் திருவுள்ளப் பாங்காகில், உத்தரவாக மிகவும் வேண்டிக் கொள்ளுகிறேன். மஹான்கள் அந்தரங்கத்தைச் சீக்கிரம் வெளியே சொல்லார்கள்."

ஸ்ரீ தேவிக்கர்ப்பணமிது. 27-10-10.

ஸ்ரீதேவி சரண்.

உத்தரம் (28-10-10)

"ஆஷாடபூதிப் பண்டார மவன்
வேசடை நீக்கும் வழியறியான்:
பாசறையில் வைத்த பொக்கிஷத்தைக்
காசறையில் வைத்துப் போக்காதே!
தாசரதே! யென்ற குரங்கின்சேஷ்டையும்
தசரதன் சோ ழும் ஒன்றாமோ!
அசரீரி யாயுள்ள ஆத்மரஹஸியத்தை
ஸசரீரிகளு முணரப் போமோ?
போகா தப்பா போகாது!
புலன்பொறி யாளர்க்குப் போகாது!"

---

## Easy Lessons for the Young

(*Copy-right*)

### 2. The Siddha's Sayings Explained.

### சிறுவர்க்கான ஹிதோபதேசங்கள்.

### 2. சித்தரது உபதேசவாக்கியங்களின் உண்மை விளக்கம்.



தனுபதேசத்தில் "எல்லாம் வல்ல சித்தராம்" குருபரன் தன்னைச் சரண் என்றடைந்ததோர் ஆத்மனைப் பெண்ணாக்கிப் "பதிவிரதா தர்மத்தைப் பாரில் நீ காக்க" வென்று சொல்லி "ஐவர்நு மானதோர் ஐந்தைக் கொண்டு உள்ளெழு ஐய ங்களை யெல்லாம் தொலைப்பாய்!" என்று உபதேசித்துப் போனதைக் கூறினோம். "கல்யானை கரும்பு தின்னச் செய்தவரான" அந்த சித்தர் வாய்ப்பிறந்த திவ்யோபதேசங்களின் உட்கருத்தென்ன வென்று உள்ளாய்ந்து பார்ப்போம். அவர் சொன்ன மாத்திரத்தினாலே "பெண்தன்மை" (அதா

வது "கிராஹியசக்தி" வாய்ந்த ஆத்மன் "யாருமறியாத அரிச்சந்திரன் கட்டினதாலி" பூண்டு (அதாவது "மனம் கொண்டது மாங்கல்யம்" என்ற மூதுரைப்படி சிரவணமனன நிதித்தியாஸனத்தால் அவர் உபதேசத்தை யுட்கொண்டு அதே லக்ஷியமாய் நாதானுசந்தானம் செய்து) அவர்சொல்லிய அதிசாமான்யமான ஒவ்வொரு வாக்கியத்தின் உட்பொருளைச் சிந்தித்து மனோவாக்குக்காயங்களால் திரிகாணசுத்தியாய் அவருடைய வாக்கைப் பரிபாலனம் செய்துவர அவ் வாக்கியங்களின் வாச்சியார்த்தம்போல் லக்ஷியார்த்தமும் அதியற்புதமாய் விளங்குவதாயிற்று.

"துர்க்கமாயைநம:"—"ஸமரேசதுர்க்கா" என்றபடி ஸ்ரீ துர்க்கையாம் அதிர்ஷ்டான தேவதையை சம்ஹாரசக்தியாக நமஸ்கரிக்கச்சொன்னதால் "தன்னயம் பாராட்டாமையும் தன்னைக் கொடுத்தலுமான "சதிதர்மம்" சாசுவத துணையாகக் கொள்ளத்தக்க தென்பதைக்குறித்தது வெள்ளிடைமலைபோல் விளங்கா நின்றது.

இனி "மூலவஸ்துமானதோர் ஐந்தாம்" அவருடைய பதினைந்து வாக்கியங்களையும் அவற்றின் வாச்சிய லக்ஷியார்த்தங்களையும் ஆராய்வோம். "பஞ்சசங்கியாயைநம:" என்றதனால் தேவி ஐந்து என்னும் எண்ணுக்கதிஷ்டானமாய் பஞ்சீகரணவிதிக்குத் தாரகமாய் இருக்கிறாளென்பது பெறப்பட்டது. "அறிவுருவாம்" தேவியை அந்தர்யாமியாகவும் அந்தர்ப்பூதமாகவும் அறிந்து ஆச்ரயித்து பதிவிரதாதர்மத்தை யனுசரிக்கவேண்டும். ஏனெனில் தேவியவள்தானே தர்மாம்பாளாகவும், தர்மஸம்வர்த்தினியாகவும் இருந்து தர்மத்தை ஸ்தாபித்து தர்மத்தை விருத்திசெய்கிறாள்.

(1) "அண்டை அயல் கேட்கப்பேசாதே." இதன் வாக்கியார்த்தம் வெகு சுலபம். இதன் லக்ஷியார்த்தமும் அப்படியே. "மோனமென்பது ஞானவரம்பு" என்றுரைத்தனிலுமே மோனத்துக்கு மிஞ்சிய சாதனமும் சாத்திமமுமில்லாமையினாலும், இதனால் "குருசொல் ஒருசொல்" என்றபடி தேவியின் "மௌனமந்திராதிக்ய வித்யை"யாம் மோனத்தையே உபதேசித்தார்.

மௌனம் மூன்றுவிதம்:—

(1) காஷ்டமௌனம்,—அதாவது, தேகம் நிச்சலனமாய்த் தாணுவைப்போல் தண்டாகாரமாய் ஸ்தம்பித்து நிற்பது. இது பிராணயாபவித்திபெற்றவருக்கே ஸாத்தியம். மற்றவர்களுக்கு நேரும் காஷ்டமௌனம் "மூர்ச்சை" யென்று சொல்லப்படும்.—

(2) வாக்குமௌனம்.— "யாகாவாராயினும் நாகாக்க"வென்ற திருவள்ளுவரின் பொய்யாமொழியாலும், "மௌனம் ஸர்வார்த்தஸாதகம்", "மௌனம் கலஹநாஸ்தி" யென்ற ஆப்தவசனங்களினாலும் வாக்குமௌனத்தின் விசேஷம் தானேவிளங்கும்.

(3) இவை யிரண்டிலும் பெரிதும் ஸர்வோத்கிருஷ்டமுமானது "மனோமௌனம்". இந்த மனோமௌனத்தை யுத்தேசித்தே மற்ற மௌனங்களெல்லாம் அப்பியசிப்பது. அவைகளெல்லாம் சாதனங்களாம். இஃதொன்றே சித்திமுக்தியெலலாமளிக்கும்: ஆகையால், சாத்தியபுருஷர்களால் மிகவும் விசேஷமாகக் கொண்டாடப்பெற்றது.

கல்லால நீழலிலிருந்து பரமகுருவாகிய தக்ஷிணாமூர்த்தி சநகாதி நால்வர்க்கு உபதேசித்ததும் இதுவே. மௌனோபதேசமே யுபதேசமன்றி மற்றவெல்லாம் உபதேசமாகா.

> "நீதியாய்க் கல்லாலி னீழலின்கீ ழேயிருந்து
> போதியா வுண்மையெலாம் போதித்தான்—எதில்
> சநகாதியாய தவத்தோர்க்கு ஞான
> தினகரனு மௌன சிவன்."—தாயுமானவர்.

என்றதனாலேயும் மௌனோபதேசத்தின் பெருமைவிளங்கும்.

(2) "சண்டைபோட்டெதிர் பேசாதே." இதன் வாச்சியார்த்தம் வெள்ளிடையாக விளங்கும். பதிவிரதாதர்மம் பூண்டோர், ஆணாயினும் பெண்ணாயினுஞ்சரி சண்டைபோட்டெதிர்பேசலாகாது. ஏனெனில் சண்டையால் சண்டையே வளரும். எதிர் பேசுவதினால் வார்த்தை வளருமன்றி வேறு பிரயோசனமில்லை. வார்த்தை கொடுத்தால் வார்த்தையின் அர்த்தத்தைக்கிரஹித்துக்கொண்டு அதன் லக்ஷியத்தையுணர முயல்வோரிடம் வாக்குக் கொடுக்கவேண்டுமேயன்றி, தாம் என்றால் தோம் என்று எதிர்சப்தம்செய்யும் "வாதநோவாளரிடம்" பேசுவது மகா தொல்லை! ஏனெனில் அவர்கள் விவேகசூனியர்களென்பது திண்ணம். "வேதமுதலான நல்லாகமத்தன்மையை விளக்குமுட் கண்ணிலார்க்கும், மிக்கநின் மகிமையைக் கேளாத செவிடர்க்கும், வீறுவாதம் செய்யும் வாய்-வாதநோவாளர்க்கு மெட்டாத மூக்கனுடைமாயருந்துக் கமிர்தமே!" யென்று அனுபவித்தறிந்தவர் கூறியிருப்பதால் எதிர்வாதம் செய்வதை பொருபொருட்டாக நினைப்பவர் விசாரமுடிவெய்தி விச்ராந்தியடையார். ஆதலால் திரிகாணங்களாலும் "சண்டைபோட்டெதிர்பேசாதே" யென்றார். இக்கலிகாலத்தில் பரமசாதுவாயிருந்தால் எல்லோரும் தலையிலொரு சொட்டுவைப்பார்களேயென்றால், அப்படியல்ல! நல்லபாம்புக்குச்செய்த உபதேசம்போல் அந்தக்கரண சுத்தியார்த்தம் கர்ம சங்கல்பம் நழுவுவதற்காகச் சொன்னதை அசட்டுத்தனமாயர்த்தம்செய்துகொண்டு மோசம் போகக் கூடாது. "சக்திக்கு வித்துத் தனதுபசாந்தமே" யென்று திருமந்த்ரோபதேச மிருப்பதால் அந்த உபசாந்தத்தைப் பெறவேண்டி மனவிச்ராந்தியடைவதற்கான சாதனத்தை யுபதேசித்தார். அதனால் இளிச்சவாய்த்தனம் போகவேண்டுமென்பதல்ல. அற்ப விஷயங்களில் பொறுமை விவேகிக்குத் தானே வரும். பொறுக்கக் கூடாத பெரிய விஷயங்களில் "எய்தவனிருக்க அம்பை நோவாமல்" அனுபவத்தைக்கொண்டு காரிய காரண தோரணையாக விசாரணை செய்துகொண்டு போனால் கர்மத்தின் விதி விளங்கும். விளங்குங்கால்,—

"தான்முன்னஞ் செய்தவிதிவழி தானல்லால் [ல்லை."
வான்முன்னஞ் செய்தங்குவைத்ததோர் மாட்டி

என்னும் திருமந்திரோபதேசத்தின் உண்மை விளங்கும்.

(3) "உண்டதற் கிரண்டகம் நினைக்காதே." சாந்தோக்கியோபநிஷத்திற்சொல்லியபடி "பஞ்சயஜ்ஞத்தாலே" இந்த மானுடதேஹம் சித்தித்ததினாலே, பஞ்சயஜ்ஞத்தையே பரமசாதனமாகக் கொண்டு வந்தவழியைத் தேடிக்கொண்டு மீண்டும் கடவுளின் திருவடியைச் சேர்ந்து ஜன்மஸாபல்யம் பெறவேண்டும். உண்ணும் பொழுது இந்த தேஹத்தையே யாககுண்டமாக வமைத்து அதிலுள்ள ஜாடராக்னியையே யாகாக்னியாகக்கொண்டு பஞ்சாக்னி வித்யையினாலே, பிராண, அபான, வியான, உதான, சமானனாகிய பஞ்சப் பிராணன்களுக்கும் உண்ணுமுணவை யாகுதியாகச் செய்து, பஞ்சப் பிராணனும் சேர்ந்த ஜீவனை (பசுவாக பாவித்து) சிதக்னி குண்டத்தில் யாகஞ்செய்து பிரஹ்மத்துக்கு அர்ப்பணமாக்கவேண்டியது. இது உண்டது உடம்பில் ஒட்டி உயிர்வளர்ப்பதற்குக்காரணம். ஈசுவரத்தியாகத்தால் இந்த தேஹம் கிடைத்ததால், தேஹத்திலுள்ள ஜீவனை வளர்த்து ஈசுவரனுக்கு அர்ப்பணமாக யாகஞ்செய்வதால் அவனிடத்தில் பட்ட கடனைத் திருப்பிக்கொடுத்து ருணந்தீர்ந்தவர்களாகிறோம். இல்லாவிட்டால் ருணபாதகர்களாய் ஆகாமிய சஞ்சித ப்ராரப்த கர்மங்களாலே தூண்டப்பட்டு மேன்மேலும் கர்மத்தையே செய்து கர்மவலையிற் பட்டு "புனரபிஜநநம் புனரபிமரணம்" என்றபடி பிறப்பதும் இறப்பது மாகவே யிருந்து காலசக்ரத்தில் சிக்கிச் சுழன்றுழன்று அவதிப்பட வேண்டி

யது தான். ஆதலால் ஊனை வளர்த்து யமன் வாய்க்கிரையாகாமல், ஊனுணர்வைச் சிதக்னி குண்டத்தில் ஆகுதிசெய்து சின்மயானந்தராகவே உண்ணல் வேண்டும். இதைவிட்டு, 'பூதமொடு பழகிவளர் இந்திரிய மாம்பேய்கள் புந்திமுதலானபேய்கள், போராடு கோபாதி ராக்ஷஸப் பேய்களென் போதத்தை யூடழித்து வாதனை வளர்த்திடச் சதுர்வேத வஞ்சன் விதித்த"தோர் விதிக்காளாகி மாயை மயக்கி லகப்பட்டு மயங்கித்திரியில் அது "உண்டதற் கிரண்டகம்" நினைத்தலாம்—அப்படிச் செய்ய நினைக்காதே யென்றார்.

(4) "கோண்டவனைக் குடி கெடுக்காதே."

வர்ச்சியார்த்தத்தில் கொண்டபுருஷன் குடியைக் கெடுப்பது இல்லற தர்மத்துக்கு எப்படி விருத்தமோ, அப்படி லக்ஷியார்த்தத்தில், தன்னை ஆட்கொண்டவனான கருணாகரக்கடவுளின் அகிலாண்டகோடிகள் நிறைந்த குடித்தனத்தை "கெடுக்காதே"—ஜீவகாருண்யமில்லாத கொடுமையால் கெடுக்காதே யென்றார். விவேகிகள் இதனர்த்தத்தை நிதித்தியாஸனத்தில் விஸ்தாரமாக அறிந்துக்கொள்வார்கள்.

(5). "சண்டித்தன மினிச் செய்யாதே."

சண்டித்தனம் செய்வதால் "இல்வாழ்க்கை யென்னு மியல்புடைய வான்சகடம் செல்லாது தெற்றிற் றுநின்று." சதிபதி தர்மம் எப்படி காதலனும் காதலியும் மனதொத்துத் தீதிலொருகருமம் செய்யாவிடத்துத் தவறிப்போய் விடுமோ அப்படிப்போல ஸநாதனமான பசுபதி தர்மமும் கடவுள் வழிப்பாடின்றித் தான்போனதேபோக்கென்று அஹங்கார மகாரசேஷ்டைகளால் சண்டித்தனம் செய்துவரின் தடைப்பட்டு நின்றுபோம்.

"பதிபசு பாசமெனப் பகர்மூன்றில்
பதியினைப்போற் பசுபாசமனாதி
பதியினைச் சென்றணுகாப் பசுபாசம்
பதியணுகிற் பசுபாச நில்லாவே."

—என்பது திருமந்திரோபதேசமானதால், "சித்தன் போக்கு சிவன் போக்கு" என்றபடி சிவனது வழிபாட்டையன்றித் தனக்கென்று வேறொருவழிபற்றாச் சித்தன் குருமூர்த்தமாய் வந்து தரிசனமளித்து உபதேச அனுக்ரஹமும் செய்தபின் "சண்டித்தனம்" செய்தால் "பதியினைச் சென்றணுகாப் பசுபாசம்" தொலையாது துன்பம் விளைத்துவரும். "சண்டித்தனமினிச் செய்யாதே" என்ற குருசொல் கேட்டு, அஹங்கார மமகாரங்களை விட்டொழித்தால் பரங்கருணை மிகுதியால் பதியணுகும். "பதியணுகிற் பசுபாசம் நில்லாவே." இதன் பயன் நாம் சொல்லாமலே விளங்கும் சுகோதயமானோர்க்கு.

ஓம்தத்ஸத்.

---

## MILKING THE SNAKES.

பால்கறந்தால் பாம்பு இரையெடுக்காது.


ம்பாயிலுள்ள பாரேல் லேபோரேடரியில் பாம்பின் விஷமெடுக்க வென்று பாம்புகளைப் பிடித்து வளர்த்து வருகிறார்கள். பாம்பினின்றும் பால்கறக்க, ஒரு பெரிய ஸர்ப்பத்தைக் கொண்டுவந்து அதைக்கூட்டைவிட்டு வெளியேற்றியதும் அது படமெடுத்து ஆடும்பொழுது அதற்காகவென்று பழக்கப்பட்ட பிடாரன் ஒரு கோலினால் அதைக்கீழே அழுத்திப் பிடித்துக்கொண்டு அதன் கழுத்தைப் பிடித்துக்கொண்டு ரப்பர்மூடியிட்ட ஒயின்க்ளாஸ் ஒன்றை அதன்வாயின் எதிரே கொண்டுபோய்த்திணிக்க, ஸர்ப்பம்சீறி அந்த ரப்பரைக் கடிக்கிறது. உடனே ஒரு உத்திரணி விஷம், பால்கறந்தாப்போல், கிளாஸில் விழுகிறது. இப்படி வேண்டிய விஷம் கறந்தபின் அதை ஒரு சீஸாவில் அடைத்து ஹிமாலயத்திலுள்ள காஸௌலி லேபொரெடரிக்கு அனுப்பிவிடு

கிறார்கள். அங்கே அந்த விஷப்பால் பாம்புகடிக்கு ஔஷதமாம் ஒருவித "ஸிரம்" செய்ய உபயோகிக்கப்படுகிறது. இப்படி விஷம் கறக்கப்பட்ட பாம்பானது பின்னர் இரை யெடுப்பதில்லையால் அதற்கு கோழிமுட்டையைப் பாலில்கலந்து சேர அடித்துப் புகட்டுவது வழக்கம். தன் விஷமாகிய வீரியத்தை யிழந்த ஸர்ப்பம் பசிதாஹம் பாராட்டாது இரையெடுப்பதில்லை.

பாம்புக்கு விஷம் எப்படியோ அப்படி ஜீவனுக்கு பிந்து வீரியத்தைக் கொடுப்பதாம். "ஆதியாய்நின்ற அறிவு" முதல் தேஹத்தின் தத்துவங்களெல்லாம் "சேர்ந்தாய ஒன்று" "விந்து" என்று ஔவையார் சொல்லியிருக்கிறார். ஆதியாய் நின்ற அறிவாம் பராசக்திக்குக் கடைசியாய் விளையும் விந்து தர்ப்பணத்தால் சந்துஷ்டியதிகம். இது சக்திக்கும் வித்துக்குமுள்ள ஆகர்ஷணசக்தியைக்காட்டுகிறது. வித்திலே சக்தியிருப்பதால் வித்தினால் தர்ப்பணம் செய்தால் சக்திக்கு சந்துஷ்டி யென்பது சகஜந்தானே. ஆதியாயுள்ள சக்தியும் அந்தமாயுள்ள விந்துவும் போக, நடுவிலுள்ள தொன்றுண்டு. அதுதான் "கீலகம்" என்று சொல்லும் முளை. வித்தில் ஜலம் வார்த்தால் அதிலுள்ள சக்திவெளிப்படுகிறது: முளையென்னும் விருத்தி லபிக்கிறது. அந்த வித்தை வறுத்துவிட்டால் முளையும் முளைக்குஞ்சக்தியும் மறித்துப்போகிறது. இதேபோல,ஜீவனுடைய முளைக்கு அஹம்—பீஜம்; ஸ:—சக்தி. அஹம் என்கிற பீஜம் பிராணன் என்கிற ஜலம் பட்டால் "அஹங்காரம்" என்கிற முளைவிட்டுச் சீறிக்கிளம்பும். அஹத்திலிருந்து அஹங்காரமாகச் சீறி யெழுந்த முளையானது (ஸம்ஸார விருத்தி), விஷம் கறக்கப்பட்ட பாம்புபோல் அஹங்காரமடங்கக் குளிர்ந்துபோனால் விஜ்ஞானவிருத்தியோடு ஸம்ஸாரவிருத்தியும் அடங்கிப்போம். இந்த விருத்திகளிரண்டும் அடங்கின் துக்கநிவிர்த்தி யுண்டாகி கோபதாபம் முதல் பசிதாஹங்கள் ஈறாக எல்லா சேஷ்டைகளு மடங்கிப்போம். சேஷ்டை யடங்கினால் தேஹம் சாஷ்டமாகுமாதலால், தேஹஸம்ரக்ஷணைக்கு வேண்டிய ஏற்பாடுகளை முன்போல் பசிதாஹக்கொடுமை பொறுக்காது செய்ய நிமித்தமில்லையானாலும் ஈசுவராராதனமாக நடத்திவரவேண்டியது.

"உடம்பினை யிழுக்கென்றிருந்தேன்
உடம்பினுக்குள்ளே யுறுபொருள்கண்டேன்
உடம்பிலேயுத்தமன்கோயில்கொண்டானென்
றுடம்பினையானிருந்தோம்புகின்றேனே."

என்பது திருமூலதேவர் திருமந்திரம்.

இப்படி நடத்திவந்தால் ஜீவாஹங்காரம் நசித்தவிடத்தில் பராஹங்காரம் தோன்றி அதுவும் பரபவியோமாசாரமாக விளங்கும். ஆதலால்தான் "அஹம் சீறியே குளிர்ந்தபின் எப்படியிருந்தாலென்"? என்று ஸ்வானுபவச் செல்வியாம் ஔவையாரம்மாள் பாடியிருக்கிறார்.

விஷத்தைக்கக்கின பாம்பு இரையெடுக்காததுபோல, அஹங்காரத்தை யிழந்த புருஷன் பிரவிருத்தி மார்க்கத்தில் பிரவேசியான். ஆனாலும் அவன் கர்மசேஷத்தால் பிரவிர்த்திக்க நேரிட்டாலும் அதன் பலாபலனைப் புசிக்காமல் கர்த்தா போக்தா வென்கிற நினைவிழந்து நிஷ்காம்யமாகவே கர்மத்தைச் செய்து நைஷ்கர்ம சித்தி பெற்று விளங்குவான். நைஷ்கர்மசித்தி பெற்றவன் "எப்படி யிருந்தாலென்?" ஔவையாரம்மாள் பல்லவிபாடி யிருப்பதின் கருத்து இதுவே. இப்படி யஹங்காரத்தை யடக்குவதற்கு "நாதப்பால் கறக்கிறது" என்று சொல்கிறது. "பூத முதலாகவே நாதபரியந்தமும் பொய்யென் றனைக்காட்டி" யென்றிருப்பதால் தத்துவங்களுக்கெல்லாம் மேலான நாதத்தைப் பால்கறந்து விட்டால், தத்துவ விருத்திகளெல்லாம் ஓய்ந்துபோம். தத்துவப் பேய்களின் தொந்தரவு இல்லையாகில் தத்துவங்களை விட்டு தத்துவனுடைக்கியமா யிருக்கலாம். இதற்குச் சாதனம் மௌனமொன்றே. மௌனசாதனம் சித்திபெற்றால் ஞானமென்பது தானே கைகூடும். ஆதலால் தான் "மௌன மென்பது ஞான வரம்பு"—என்றார்.

ஓம் ஸ்ரீ சாவித்திரியைநம:

# உபநிஷதர்த்த தீபிகை.

—:-:—

## 7. சுகாரஹஸ்யோபநிஷத்.

(239-ம் பக்கத் தொடர்ச்சி.)

சஹநாவவது இதிசாந்தி:

28. மேல் ரஹஸ்யோபநிஷத்தில் தனித் தனியாய் வாக்கியார்த்த சுலோகங்கள் சொல்லப்படுகின்றன:—

[முதல் மஹாவாக்கியார்த்தம்.]

29. எதனால் பார்க்கின்றானே, கேட்கின்றானே முகர்கின்றானே, சொல்கின்றானே, ருசியுள்ளன ருசியில்லாதனவைகளை யறிகின்றானே அது விஞ்ஞானமென்று சொல்லப்படும்.(2)

பிரஹ்மா, இந்திரன் முதலிய தேவர்களிலும், மநுஷ்யர் குதிரை மாடு முதலியவைகளிலும் ஏகமாய் (நிற்கும்) சைதன்யம் எதுவோ அது பிரஹ்மமென்னப்படும். ஆகவே பிரஞ்ஞானமாகிய பிரஹ்மம் என்னிலும் (இருக்கின்றது)(3)

[2-வது மஹாவாக்கியார்த்தம்.]

30. அவித்தைக்கு அதிகாரியான இந்த தேகத்தில் பரிபூர்ணமாகிய பரமாத்மாவானவர் புத்திக்குச் சாக்ஷியாய் நின்று பிரகாசிப்பர். அவரையே "அஹம்" என்று சொல்லப்படும்.(4)

தானே பூர்ணமாயிருக்கும் பரமாத்மா இவ்விடத்தில் "பிரஹ்ம" என்கிற சப்தத்தால் வர்ணிக்கப்படும். "அஸ்மி" என்பது (அவ்விரண்டின்) ஐக்யஞானமாகும். ஆகையால் நானே பிரஹ்மமாக விருக்கிறேன்.(5)

[3-வது மஹாவாக்கியார்த்தம்.]

31. ஒன்றேயாயும் அத்வதீயமாயும் நாமரூபமற்றதாயும் இருந்துகொண்டு, சிருஷ்டிக்குமுன்னும் இப்பவும் அவ்விதமாகவேயிருக்கும் தன்மையை தத் என்கிற பதத்தால் சொல்லப்படும்.(6)

(இம்மகாவாக்கியத்தை)க் கேட்பவனுடைய தேகம் இந்திரியம் இவைகளுக்கு அப்பாற்பட்ட வஸ்து எதுவோ அது "துவம்" என்கிற பதத்தால் சொல்லப்படும். "அசி" என்பதால் அவைகளின் ஐக்யமறியப்படும். அந்த ஐக்கியத்தை யனுபவிப்பாயாக.(7)

[4-வது மஹாவாக்கியார்த்தம்.]

32. ஸ்வப்பிரகாசத்துவமும் அபரோக்ஷத்துவமும் (ஆகிய லக்ஷணங்களோடு கூடியதாக) சொல்லப்படுவதால் அறியப்படுவது "அயம்" என்னும் பதத்திற்குப் பொருளென்று சொல்லப்படும். அகங்காரம் முதல் தேகபரியந்தம் எது "பிரத்யகாத்மதகமாய் (அந்தர்யாமியாய்) இருக்கின்றதோ அது "ஆத்மா" வெனப்படும்.(8)

---

* தவயணுகம் என்பது இரண்டு அணுக்கள் சேர்ந்தது (Dyad)

(2) இச்சுலோகத்தால் "பிரஞ்ஞானம் பிரஹ்ம" என்கிற மகாவாக்கியத்தில் "பிரஞ்ஞானம்" என்பது சொல்லப்பட்டது.

(3) இதனால் "பிரஹ்மம்" என்கிறமுழு மகாவாக்கியத்தின் அர்த்தமும் சொல்லப்பட்டது.

(4) இவ்விடத்தில் "அஹம் பிரஹ்ம அஸ்மி" என்கிற மகாவாக்கியத்தில் "அஹம்" என்னும் பதத்தின் பொருள் சொல்லப்பட்டது.

(5) "அஹம் பிரஹ்ம அஸ்மி" என்கிற மகாவாக்கியத்தின் அர்த்தம் இதனால் சொல்லப்பட்டது.

(6) இதில் "தத்துவம் அசி" என்கிற மகாவாக்கியத்தில் தத் பதத்தின் அர்த்தம் சொல்லப்பட்டது.

(7) இச்சுலோகத்தால் அதே மகாவாக்கியத்தில் துவம், அசி இரண்டு பதங்களின் அர்த்தமும், முழு வாக்கியத்தின் அர்த்தமும் சொல்லப்பட்டது.

(8) இச்சுலோகத்தில் "அயம் ஆத்மா பிரஹ்ம" என்கிற மகாவாக்கியத்தில், "அயம்" "ஆத்மா" என்கிற பதங்களுக்குப் பொருள் சொல்லப்பட்டது.

தோற்றப்படும் சகல ஜகங்களுக்கும் தத்துவமானது (உண்மையானது) எதுவோ அது "பிரஹ்மம்" என்கிற சப்தத்தால் சொல்லப்படும். அப்பிரஹ்மம் சுவயம்பிரகாச ரூபமானது.(9)

33. அநாத்ம திருஷ்டியால் (ஆத்மா வல்லாததை ஆத்மாவாய்ப் பார்க்கும் இருட்பார்வையால், அவிவேகமென்கிற நித்திரையையும் நான் எனது என்று என்னும் ஸ்வப்நாவஸ்தையும் அடைந்த நான், குருவால் தெளிவாய் உபதேசிக்கப்பட்ட மகாவாக்கியங்களின் பதங்களால் ஸ்வரூபமாகிய (பிரஹ்மஞானமாகிய) சூர்யன் உதயமாகவும் விழித்துக் கொண்டேன் (அறிவையடைந்தேன்).

[வாச்சியார்த்த லக்ஷியார்த்தங்கள்].

(34) (மகா) வாக்கியங்களின் அர்த்தம், வாச்சியார்த்தம், லக்ஷியார்த்தமென இருவகைப்படும். "துவம்" பதத்தின் வாச்சியார்த்தம் பாஞ்ச பௌதிகமும் (சரீரமும்) இந்திரியம் முதலியவைகளுமாம்; "துவம்" பதத்தின் லக்ஷியார்த்தம் (பிரத்தியகாத்மாவாகிய) அவன். "தத்" பதத்தின் வாச்சியார்த்தம் ஈசுவரத்துவ ஞானமாகும்; அதன் லக்ஷியார்த்தம் சச்சிதாநந்த பிரஹ்மமாகும். அவை யிரண்டின் (லக்ஷியார்த்த மிரண்டின்) ஐக்கியம் "அசி" பதமாகும்.

35. துவம் (நீ) தத் (அது), என்கிற இவ்விரண்டும் காரிய காரண உபாதிகளுள்ளவளவே (உண்டு). (அவ்வுபாதிகள்) இல்லாவிடில் ஏகமாகிய சச்சிதாநந்த ரூபம் மட்டுமே (நிற்கும்).

36. இந்த ஜகத்தில் இரண்டு என்கிற வார்த்தைக்குக் காரணமாகிய தேசகாலங்களை விடவே, 'அவன் அந்த தேவதத்தன்" என்கிற வாக்கியத்தில் எவ்விதம் தேவதத்தன் ஒருவனே, (அவ்விதம் துவம், தத் இவ்விரண்டு பதங்களின் அர்த்தமும் ஒரு பொருளையே குறிக்கும்).

37. காரியோபாதியையுடையவன் ஜீவன். காரணோபாதியையுடையவன் ஈசுவரன். காரியகாரணத்தன்மையைத்தள்ள பூர்ண ஞானமே மிஞ்சி நிற்கும்.

[சிரவண, மனன, நிதித்தியாஸநம்]

38. அந்த பூர்ணஞானத்திற்கு முதலில் குருவினிடம் சிரவணமும், பிறகு (கேட்டதின்) மனனமும், அதன் பிறகு நிதித்யாசனமும் (நிஷ்டை அப்பியாசமும்) காரணமாகும்.

39. மற்ற வித்தைகளின் ஞானம் அவசியம் நாசமடையும். பிரஹ்ம வித்யா ஞானம் மட்டிலும் பிரஹ்மத்தை யடைவிப்பதாகும்.

[உபதேசக்கிரமம்.]

40. பிரஹ்மாவின் வாக்கியப்படி (பிரஹ்மா இவ்வுபநிஷத்தில் உபதேசித்தப் பிரகாரம்) ஷடங்கங்களோடும் குருவானவர் மகாவாக்கியங்களை உபதேசிக்க வேண்டும். கேவல வாக்கியங்களை மாத்திரம் உபதேசிக்கக் கூடாது.

41. ஈசுவரன் சொல்கிறார்:—முனிசிரேஷ்டனாகிய ஓ சுகரே, பிரஹ்மவாதியாகிய உன்பிதா வியாசரால் கேட்கப்பட்டு என்னால் ரஹஸ்யோபநிஷத்தானது (இவ்விதம்) சொல்லப்பட்டது.

அதனால் உனக்கு சச்சிதானந்த லக்ஷணமுடைய பிரஹ்மமானது உபதேசிக்கப்பட்டது. நீ ஜீவன்முக்தனாய் சதாகாலமும் தியானத்தில் நின்றுகொண்டு சஞ்சரிப்பாயாக.

42. எவரை வேதத்தின் ஆதியில் ஸ்வரமென்று சொல்லப்படுமோ, எவர் வேதாந்தத்தில் ஸ்திரமாய் நின்கின்றாரே (அல்லது பிரதிபாதிக்கப்படுகிறாரோ), பிரகிருதியில் லயமா

(9) இதில் நான்காம் மகாவாக்கியத்தில் "பிரஹ்மம்" என்கிற பதத்தின் பொருளும் மகாவாக்கியத்தின் பொருளும் சொல்லப்பட்டன.

யிருப்பவருக்கு மேற்பட்டவரெவரோ அவரே மஹேசுவரர்.

43. இவ்விதம் சிவனுலுபதேசிக்கப் பட்டவராய், சகல ஜகத்தும் அம்மயமாகி (சிவமயமாகி) (சுகரானவர்) எழுந்து ஈசுவரனை நமஸ்கரித்து சகல பற்றுக்களையும் விட்டவராய் பரப்பிரஹ்மமாகிய மகாசமுத்திரத்தில் நீந்துபவரைப்போல் அப்பொழுது வெளியிற் புறப்பட்டார். சகலத்தையும் விடுத்துப் போகும் அவரை கிருஷ்ணத்வைபாயனராகிய (வியாச) முநிவர் தன் புத்திரனுடைய பிரிவால் துக்கமடைந்தவராய் பின் தொடர்ந்து கூப்பிட்டார். உடனே ஸ்தாவர ஜங்கமமாகிய சகல ஜகத்தும் பிரத்யுத்தரம் செய்தன.

44. சகலாகாரமான சத்யவதியின் பிள்ளையாகிய வியாசர் அதைக்கேட்டு தன் குமாரனுடன் சேர்ந்து பிரீதியினுல் பரானந்தத்தை யடைந்தார். எவன் குருவின் அநுக்கிரகத்தால் இந்த ரஹஸ்யோபநிஷத்தைப் படிப்பானே அவன் சர்வபாபங்களினின்றும் விடுபட்டு சாக்ஷாத் கைவல்யத்தை யநுபவிப்பான்.

(7-வது சுகரஹஸ்யோபநிஷத் சம்பூர்ணம்.)

மு. கோ. நாராயணஸ்வாமி அய்யர்.

---

ஸ்ரீ சாவித்திரியை நமஃ

## Sivayoga-Deepika.

## Chapter IV.

### (Sankhya Yoga and Taraka Yoga).

### சிவயோக தீபிகையில் சாங்கிய த்ாரகயோக விதானமென்கிற நான்காவது படலம்.

(1) சர்வ வியாபகமாய், சுருதியின் சிரத்திலிருப்பதாய், அத்துவைதமாய், சகலத்திற்கு மாதியாய், ஜோதிர்மயமாய், த்ருடவைராக்கியமுள்ள யோகீசுவரர்களா லடையத்தக்கதாய், லக்ஷியத்திற் பிரகாசிப்பதாயிருக்கின்ற யாதொரு வஸ்துவுண்டோ, அப்படிக்கொத்த பிரஹ்ம ஸ்வரூபமான சதாசிவ யோகீசுவர ரென்கிற லிங்கஸ்வரூபியான பரம குருவை நான் பிரதிதினமும் சேவிக்கின்றேன்.

(2) இராஜயோகத்தின் அஷ்டாங்கங்கள். சகல யோகங்களிலும் ராஜயோகம் சிரேஷ்டமெனப் பெரியோர்களாற் சொல்லப்படும். ஆகையால், ஓ சிஷ்யனே, உனக்கிப்பொழுது ராஜயோகத்திற்குச் சாதனமான அஷ்டாங்க ஹடயோகத்தைச் சொல்கிறோம் கேள்.

3. முன் ஹடயோகத்திற் சொல்லிய அஷ்டாங்கங்களையும் இப்பொழுது ராஜயோகாங்கமாக ஒவ்வொரு சுலோகத்தாற் சொல்லுகிறோம். நிச்சலமான மனத்துடன் கேள்.

4. (i) இயமமாவது.—ஆகாரம், நித்திரை, இந்திரியங்கள், தேகம் இவையின் சகல வியாபாரங்கள், சீதோஷ்ணங்கள், என்னுமிவற்றின் ஜயமும், சாந்தியும் இயமமெனப்படும். இந்த யோகாங்கத்தை மெள்ளமெள்ள சாதகன் செய்யவேண்டும்.

5. (ii) நியமமாவது—குருபக்தியும், பரமதத்துவ பதத்தில் அபேக்ஷையும், (மூவித) சங்கமின்மையும் (பற்றின்மையும்), தானே கிடைத்த லாபத்தில் சந்தோஷமும், ஏகாந்த வாசத்தில் ஊக்கமும், மனோநிவிருத்தியும், வைராக்கிய பாவமும் ஆகிய இவை நியமங்களென்று சொல்லப்படும்.

6. (iii) ஆசனமாவது.—சுகாஸனத்திலிருந்து ஸ்வஸ்வரூபத்திலே சதாகாலமும் அப்பியாசமும், சகல வஸ்துக்களிலும் (1) உதாசீன பாவமும் ஆகிய இவை ஆஸன மெனப்படும்.

---

(1) "பூரணபாவம்" என்று சில தமிழ் மொழிபெயர்ப்புப் பிரதிகளின் பாடம்.

7. (iv) பிராணாயாமமாவது.—ரேசக, பூரக, கும்பகங்களாகிற யத்தினத்தால் பிராணனை ஸ்திரப்படுத்துவதும், ஜகங்கள் மித்தை † யென்கிற பாவனையில் சித்தத்தை நிலைநிறுத்துவதும் பிராணாயாம மெனப்படும்.

8. (v) பிரத்தியாகாரமாவது.—அந்தர்முகியானால் சித்தம் நிர்மலமாகும். அந்த நிர்மல சித்தத்தினால் வெகுவித சைதன்ய ஜாலத்தோடு கூடின பிரபஞ்சத்தை மறந்து, மனதினால் உத்பத்தியாகிற நாநாவிதமாகிய விகாரங்களை நீக்குவதே பிரத்தியாகாரமெனப்படும். இவ்வித பிரத்தியாகாரத்தில் சலனமில்லாத மனத்தையுடைய யோகீசுவரனை சதாகாலமும் நமஸ்கரித்து பஜிக்கின்றேன்.

9. (vi) தியானமாவது —ஸோஹம்பாவனையால் த்ருடமான பரஹ்மாத்வைத பாவமும் லோகத்தில் விளங்கிக் கொண்டிருக்கு மெல்லாவற்றையும் சிவஸ்வரூபமாக பாவித்தலும், குருகடாக்ஷத்தால் சகல பூதங்களிடமும் சமதிருஷ்டியும், ஸ்வாநுபவமான ஆத்மானுபவத்தில் ஆநந்தமடைதலும் (ஆகிய) இவற்றையுடையவன் தியானநிஷ்டனென்று சொல்லப்படுவன்.

10 (vii) தாரணையாவது.—உள்ளும்புறம்பும் ஏகமாய் விளங்குகிற பரமதத்துவ ஸ்வரூபத்தை சதாகாலமும் நிர்மலபுத்தியால் சலனமில்லாமல் நிறுத்திக்கொள்ளுதல் தாரணை யெனப்படும். சலனமற்ற சித்தமே கேவலதாரணையெனச் சொல்லப்படும்.

11. (viii) நிர்விகற்பசமாதியாவது.—நிஜாநுபவ (ஸ்வாநுபவ) சீலத்துவமும், சமஸ்த தத்துவங்களிடமும் சமத்துவபாவமும், தாரணை சலனப்படாமலிருப்பதும், ஸ்திரபாவத்தினால் அநாயாசகரமாய்ச் சதாகாலமும் ஐக்கியபாவனை ஸஹஜமாய் நிற்பதும் நிர்விகற்பசமாதி யெனப்படும். (*)

12. உள்ளும் புறம்பும் சகல ஜந்துக்களினும் பரப்பிரஹ்ம ஸ்வரூபம் பிரகாசித்துக் கொண்டிருக்கின்றது. இருந்தும் சத்குருவை பஜனை பண்ணாதவர்கள் அப் பிரஹ்மபதத்தை யடையமாட்டார்கள்.

13. ஆகையால் மிக ஆச்சரியமான இந்த ராஜயோக அஷ்டாங்கத்தை (சத்புருஷனானவன்) குருகடாக்ஷத்தினாலே அடைவன். மற்ற கர்மங்களா லடையமாட்டான்.

14. மகா ஆயாசகரமாயுள்ள துஷ்கரமான அப்பியாசயோகத்தினால் என்ன பிரயோஜனம்? சற்குரு கடாக்ஷத்தால் ஓர் க்ஷணத்திலேயே பிரஹ்மாநுபவத்தை யடையலாம்.

15. சண்டஞானிகளுக்கும் (1) (பூரண ஞானியல்லாதவர்களுக்கும்) அறுசமயங்களாகிய மயக்கத்தால் அந்தகாரத்தை யடைந்தவர்களுக்கும், நானாவிதமாகிய வேதம், புராணம், சாஸ்திரம், காவியம் இவைகளில் தேர்ந்து வாக்கு திருடமுள்ளவர்களுக்கும், நாலு ஆசிரமங்களின் நியமங்களால் கொர்வித்தவர்களுக்கும் குருமுகமின்றி இந்த அபரோக்ஷ யோக ஞானமானது எவ்விதமுண்டாகும்!

16. க்ஷேத்திரம் (ஊர்), பொருள், அழகியவீடு, பெண்சாதி பிள்ளைகள், பந்துக்கள் முதலியவை, வாதம், ஔஷதம், ரசாயனம், முதலிய தாதுவாதங்கள், காமிய மாகிய மந்திர,

† 'மித்தை' யென்றால் பொய், அதாவது நித்தியமில்லாதது, ஸ்திரமில்லாதது; தோற்றம் மாத்திரமாய், ஓடுகிற ஆற்றின் நீர் போல் நிலையில்லாதது.

(*) வேறு பாடப்படி "ஸ்மிருதியின் சலனமின்மையும் ஸ்திரமான நித்தியாசனமும், ஆயாசமின்றி சத்தாகிய ஐக்கியபாவனை சகஜமாய் நிற்பதும், நிர்விகல்பமாகிய சகஜசமாதி யெனப்படும்" எனப்பொருளாகும். இந்த சுலோகத்தின் தமிழ் மொழிபெயர்ப்பு பிரதிகளில் மொழிபெயர்ப்பு தவறுதலாயிருந்ததை திருத்தியிருக்கின்றோம்.

(1) i. e. those who know in part only.

லய, ஹட்யோகங்கள் இவை முதலிய பிரதி பந்தங்களால் கட்டுப்பட்டவர்களுக்கு குருப் பிரசாதம் எவ்விதம் கிடைக்கும்!

17. ஆகையால் முதல் வர்ணாசிரம ஆசாரத்தைப்போதிக்கும் குருவினிடம் பிரஹ்ம ஞானமும் இருக்குமாகில் அவரை ஆசிரயிக்க வேண்டும். இல்லாவிடில் வேறு சற்குருவை ஆசிரயிக்க வேண்டும்.

18. அத்துவைதமாயும், அநந்தமாயும், ஆதியாயும், நிரஞ்சனமாயும், நிச்சலமாயும், நித்தியப் பிரகாசமாயும், சச்சிதானந்த ஸ்வரூபமாயும், பரமாமிருத ரூபமாயுமிருக்கின்ற ஆத்மதத்துவத்தை ஸ்வபாவத்திலறிந்தவரே சற்குருவென்றறியவும்.

19. ஞான வைராக்கியங்களினால் மூவுலகங்களையும் திருணமாக்கி, சத்குருவை முதலில் ஆசிரயித்து தத்துவ ஞானத்தை அப்பியாசிக்க வேண்டும்.

பஞ்சவிம்சதி தத்துவங்கள்

20. தத்துவங்களேவை யென்னில்:—

ஆகாசத்தில் ஆகாசாம்சம் ஞானம், வாயு அம்சம் சமானவாயு, அக்னியம்சம் சுரோத்திரேந்திரியம், ஜல அம்சம் சப்தம், பூமி அம்சம் வாக்கு. இவை ஐந்தும் ஆகாச பஞ்சகமென்று சொல்லப்படும்.

21. வாயுவில் ஆகாசாம்சம் மனம், வாயு அம்சம் வியானவாயு, அக்னியம்சம் துவக்கு, ஜலாம்சம் ஸ்பர்சம், பூமியம்சம் பாணி; இந்த ஐந்தும் வாயு பஞ்சகமென்று சொல்லப்படும்.

22. அக்னியில் ஆகாசாம்சம் புத்தி, வாயுவம்சம் உதானவாயு, அக்னியம்சம் நேத்திரம், ஜலாம்சம் ரூபம், பூமியம்சம் பாதம்; இவையைந்தும் அக்னி பஞ்சகமென்று சொல்லப்படும்.

23. ஜலத்தில் ஆகாசாம்சம் சித்தம், வாயுவம்சம் அபானவாயு, அக்னியம்சம் ரசனை (ஜிஹ்வை), ஜலாம்சம் ரசம், பூமியம்சம் உபஸ்தம்; இவ்வைந்தும் ஜல தத்துவ பஞ்சகமெனப்படும்.

24. பிரிதிவியில் ஆகாசாம்சம் அகங்காரம்; வாயுவம்சம் பிராணவாயு, அக்னியம்சம் கிராணம், ஜலாம்சம் கந்தம், பூமியம்சம் குதம்; இவையைந்தும் பிருதிவீ பஞ்சகமெனப்படும்.

25. பஞ்ச பூதங்களாற் பிறந்த இவ்விருபத்தைந்து தத்துவங்களையும் யாவனொருவன் அறிகிறானோ அவனே தத்துவஞானி. அவனே மோக்ஷாதிகாரி.

26. ஜீவனுடைய அந்தக்கரணங்களிலும் தசேந்திரியங்களிலும் உள்ள ஆத்யாத்மிகம், ஆதிதெய்விகம், ஆதிபௌதிகம் என்கிற அம்சங்களைப் பிரித்துப் பார்த்து (1)—

சாங்கிய யோகம்.

27. நான் பூதங்களுமன்று, குணங்களுமன்று, இந்திரியங்களுமன்று, மனோபுத்தி அகங்கார சித்தரூபமான அந்தக்கரணமுமன்று, சரீரமுமன்று, பிராணனுமன்று, தத்தம் ஆசிரம தர்ம கர்மங்களில் பக்கமுடைய சகல பிரபஞ்சமுமன்று, ஆனால் நித்தியமும் நிச்சலமும், அத்துவிதீயமும், நாசமற்றதும், ஜநநமற்றதும், சாந்தமானதும், சிவமானதும், நிர்க்குணமானதும் சுத்தபோத ஸ்வரூபமானதும் எதுவோ, அதுவே, நானென்று நிச்சயித்து நின்றவனே முக்தனென்று சொல்லப்படும்.

(1) தமிழ் மொழிபெயர்ப்பு பிரதிகளில் பின்வருமாறு காணப்படுகின்றது. அது மூலபாடத்துக்கு ஒத்திருப்பதாய்த் தோன்றுமையால் மேலே போடாமல் இவ்விடம் அதைக் குறிக்கின்றோம்:—

"இந்த பஞ்சபூத சம்பந்தமான தத்துவங்களிலே ஆத்யாத்மிக ஆதிதெய்விக ஆதிபௌதிகங்களென்ற மூன்றும் கிரமமாக இந்திரியங்களிலும், இந்திரிய தேவதைகளிலும் அந்தக்கரணங்களிலும் உண்டாயிருக்கும்; அதேதென்றால் சுரோத்திரம் ஆத்தியாத்மிகம், சப்தம் ஆதிபூதம், திசைகள் ஆதிதெய்விகம்; இவ்விதமாக தசேந்திரியங்களுக்கும் பார்த்துக்கொள்ளத்தக்கது."

28. ஸ்தூல சூக்ஷ்ம காரணமாகிய மூவித தேகங்களிலும் உள்ள பதினாறு விகாரங்களையும், பதினேழு லிங்கங்களையும், ஒன்பது பதார்த்தங்களையும், பிரகிருதியின் எட்டுவித ஸ்வபாவங்களையும் அறிந்து, இவைகளெல்லாம் நானல்ல, [இவைகளுக்கு] அப்பாற்பட்டவனென்று எவன் பாவனை பண்ணுகிறானோ அவனே மஹாத்மா.(1)

29. சத்தியமும் ஞானமும் அநந்தமுமானது எதுவோ அதுவே பிரஹ்மமென்று வேதங்கள் சொல்லும். நித்யானந்தஸ்வரூபமான அதுவே நீயாகிறாய் (தத்துவமஸி). இது நிச்சயம்.

30. இது நானல்ல, இது நானல்ல, வென்று ஆத்மாவை அவைகளுக்கு அன்னியமாக பாவனைசெய். அவனே நான் (ஸோஹம்), அவனே நான் (ஸோஹம்) என்று ஆத்மாவை எல்லாமாக பாவனைசெய்.(2)

31. ஹிருதயத்தில் ஞானத்தினாலேயே மோக்ஷம் என்கிற வாக்கியத்தை ஆதரவுடன் கேட்டு, இந்த ஞானயோகத்திலே மனதை ஸ்திரப்படுத்தென்று (குருமூர்த்தியானவர் சாங்கிய யோகத்தைச் சொல்லி மேல் தாரகயோகத்தைச்சொல்லுகிறார்.)

(1) "பதினாறு விகாரங்களாவன", ஞானேந்திரியங்கள்-5, கர்மேந்திரியங்கள்-5, சப்தாதி விஷயங்கள்-5, மனம் ஆகப்பதினாறு என்று மொழிபெயர்ப்பின் உரை.

"பதினேழு லிங்கங்களாவன" ஞானேந்திரியங்கள், கர்மேந்திரியங்கள், பஞ்ச மகாபூதங்கள், மனம், புத்தி என்பன வென்றும்,

"ஒன்பது பதார்த்தங்களாவன" கர்த்தா, கர்மம், கிரியை, ஞாதா, ஞானம் ஞேயம், போக்தா, போகம், போக்யம் என்பன என்றும், "எட்டுவித பிரகிருதி ஸ்வபாவங்கள்" பஞ்ச பூதங்கள், மாயை, மோகம் (அவித்தியை) அகங்காரம் என்பன வென்றும் மொழிபெயர்ப்பின் உரை.

(2) இச்சுலோகத்தின் மொழிபெயர்ப்பு தமிழ் பிரதிகளிற் காணப்படவில்லை.

## தாரகயோகம்.

32. பிராணசிநேகிதனான ஓ சிஷ்யனே, இதற்குமேல் இதற்கு மேன்மையானதும் மிக ரகசியமானதும், பிரத்தியக்ஷப் பிரமாணமானதும் நமக்கு அனுபவசித்தமுமான தாரகயோகத்தை உனக்குச் சொல்கிறேன் கேள்.

33. பிரஹ்மானுபவமடையாத வரைக்கும் வித்துவான்கள் மந்திர, லய, ஹடயோகங்களால் கிலேச மடைகின்றார்கள்.

34. [அப்படிக் கிலேசப்படாமல்] கண்களை மூடியாகிலும், கொஞ்சம் திறந்து கொண்டாகிலும், மனோதிருஷ்டியால் பிரஹ்ம ஸ்வரூபத்தைப் பார்ப்பவன் எவனோ அவன் யோகீசுவரன்.

35. சந்திர சூரியர்களின் மத்தியில் ஸ்திரமான தேஜஸ்ஸையுடைய தாரகங்களையும் (தேஜோரூபமான இரண்டு பிந்துக்களையும்) ஒன்றுபடுத்தி பிரஹ்மதாரகத்தை அப்பியசிக்கவேண்டும்.

36. இப்படிக்கொத்த தாரகயோகத்தில் பிரஹ்ம தெரிசனம் பண்ண நினைப்பவனுக்கு பாகிய லக்ஷியம், அந்தர்லக்ஷியம், மத்தியலக்ஷியம் என்கிற மூன்று லக்ஷியங்களிலும் பார்க்கப்பட்டதும் பார்க்கப்படாததுமான ஸ்வரூபங்கள் பல உள. அவைகளை அப்பியாசம் பண்ணிப் பார்க்கவேண்டும்.

37. (அந்தர்லக்ஷியம்).—மூலாந்தத்திலிருந்து தண்டத்தை (வீணாதண்டமாகிய முதுகெலும்பை) ஒட்டினதான சந்திரப்பிரபை (காந்தி) யோடு கூடின பிரஹ்மநாடியுண்டு; அதன் மத்தியில் கோடிமின்னற் பிரகாசமுள்ள ஊர்த்துவ காமினியான (மேல்நோக்கிச் செல்லும்) ஓர் தேஜசு உண்டு.

38. இத்தேஜஸானது தாமரைநூலுக்கு சமானமாய் (நுட்பமாய்) பிரஹ்ம ரந்திர பரியர்

தம் வியாபித்து சர்வசித்திகளையும் கொடுக்கின்றதாயிருக்கும். அப்படிக் கொத்த தேஜோமூர்த்தியை மனதில் லக்ஷியமாகச்செய்து தெரிசிக்க வேண்டும்.

39. இன்னமொரு பிரகாரமாவது:—லலாடத்திற்குமேல் கொல்லாட மண்டபத்தில் லக்ஷியத்தை வைத்த யோகீசுவரன் நக்ஷத்திரப்பிரகாசமான தேஜஸை மனதால் லக்ஷியம் வைத்துப் பார்க்க வேண்டும்.

0. இன்னமொரு பிரகாரமாவது—தர்ஜனியென்கிற சுட்டுவிரல்களால் காதுகளிரண்டையும் மூடினால் சிரசிலே தும்தும் என்று பிரணவநாதம் கேட்கப்படும்.

41. வேறொரு பிரகாரமாவது—கண்களின் மத்தியத்திலே நீலஜ்யோதிரூபத்தை லக்ஷியம் வைத்துப் பார்க்கவேண்டும். இம்மட்டும் அந்தர் லக்ஷியம் சொல்லப்பட்டது. இனிமேல் பாஹிய லக்ஷியத்தை சொல்லுகிறோம், கேள்.

42. (பாஹிய லக்ஷியம்:—)நாஸாக்கிரமுதற்கொண்டு வெளியிலே 4, 6, 8, 10, 12 இந்த அங்குலங்களைப் பிரமாணமாக வைத்துக்கொண்டு கிரமமாக ஆகாசம் முதலிய பஞ்சதத்துவப் பிரகாரமாக நீலவர்ணம், தூம்ரவர்ணம் (புகை வர்ணம்) ரக்தவர்ணம், தரங்கவர்ணம் (1), பீதவர்ணமுமாக நமஸ்கரித்துத் தியானம்பண்ண வேண்டும்.

43. இன்னொரு பிரகாரமாவது:— ஷண்முகாகாசத்தை (2) ஸ்திரதிருஷ்டியினால் பார்க்கும் ஸ்திரமாகிய மனத்தையுடைய யோகீசுவரனுக்கு எதிரே ஜ்யோதிக் கிரணங்கள் தோற்றும்.

44. இன்னொரு பிரகாரம்:—திருஷ்டிக்கு முன்னேயாகிலும் கடைக்கண்களிலேயாகிலும் நன்றாய்க் காய்ச்சின பொன்னின் நிறம்போலிருக்கும் பூமியை (3) லக்ஷியம் வைத்துப் பார்த்த யோகீசுவரனுக்கு திருஷ்டி ஸ்திரப்படும்.

45. இன்னொரு பிரகாரம்:—சிரசுக்குமேல் துவாதசாங்குல (பனிரெண்டங்குல) ஸ்தானத்தில் நிராகாரமான ஜ்யோதிக் கூட்டத்தை லக்ஷியமாக வைத்துபார்க்கும் யோகீசுவரனுக்கு அது முக்தியைக் கொடுக்கும்.

46. வேறொரு பிரகாரம்:—யோகியானவன் எங்கெங்கே லக்ஷியம் வைப்பானோ அங்கங்கே ஆகாசமே தோற்றப்பட்டால் அவனுடைய சித்தமும் ஆகாசத்துக்குச் சமானமாகும்.

47. இப்படியநேக விதங்களான பாஹிய லக்ஷியமானது சொல்லப்பட்டது. இனிமேல் பூர்வ வித்துவான்களாற் சொல்லப்பட்ட மத்தியலக்ஷியத்தைச் சொல்லுகிறேன் கேள்.

48. (மத்தியலக்ஷியமாவது):— வெண்மை முதலிய வர்ணங்களோடு கூடிய அர்த்த சந்திரனைப்போலவும், மின்னற்கொடி போலவும், அக்னிஜ்வாலையின் பொரிகளைப்போலவும் அல்லது ஸ்தலஹீனமான ஆகாசத்தைப் போலவும் லக்ஷியத்தைப்பார்ப்பது மத்தியலக்ஷியமெனப்படும்.

49-50. இன்னொரு பிரகாரமாவது:—நிராகாரமான குணரஹிதமான(சித்)ஆகாசத்தையும் அத்தியந்த அந்தகார ரூபமான பராகாசத்தையும், காலாக்னியைப்போல் ஜ்வலிக்கும் மகாகாசத்தையும், மிகுந்த பிரகாசத்தோடு கூடிய தத்துவாகாசத்தையும், நூறு சூர்யர்களுக்குச்

(1) தரங்கமென்றால் அலை: மூலத்தில் பாடம் இவ்விதமேதான் காணப்படுகின்றது. மொழிபெயர்ப்புப் பிரதிகளிலும் அப்படியேதான் பாடம் இருக்கின்றது.

(2) அர்த்தசந்திர முகாகாசமெனவும் பாடமுண்டு; மேற்சொல்லிய லக்ஷியத்தைக் குறித்து மண்டல பிராஹ்மணோபநிஷத்து, அத்வயதாரகோபநிஷத்து இவைகளைப் பார்க்கவும்.

(3) கடைக்கண்களிலாகிலும் பூமியிலாகிலும் என்று அத்வயதாரகோபநிஷத்திலும் மண்டலபிராஹ்மணோபநிஷத்திலும் காணப்படுகின்றது.

சமானமான சூர்யாகாசத்தையும், இந்த வியோம பஞ்சகமென்கிற உள்ளும் புறம்பும் நிறைந்திருக்கும் (இந்த) ஐந்து ஆகாசங்களையும் யாவனொருவன் லக்ஷியத்தில் பார்ப்பானோ அவன் ஆகாசத்துக்குச் சமான மாவான்.

51. இத்தாரக யோகமானது குரு சிஷ்யரிருவரையும் பவசாகரத்தைக் கடக்கப் பண்ணுவதால் தாரகயோக மென்று சொல்லப்படும். ஆகையாலதை நீ அப்பியாசம் பண்ணு.

52. சாங்கிய தாரகயோகங்க ளிரண்டுக்கும் அநுஷ்டானக்கிரமம் இருவித மாகினும் பலன் ஒன்றே. சாங்கியம் உபாதி யற்றது; யோகம் ஸோபாதிகமானது.

இவ்விதம் சதாசிவ யோகீந்திரரால் செய்யப்பட்ட சிவயோக தீபிகையில் சாங்கிய தாரக யோகவிதான மென்கிற நான்காவது படலம் முற்றும்.

மு. கோ. நாராயணஸ்வாமி ஐயர்.

---

## Kannaki—A Social Drama.

### கண்ணகி.

அங்கம். IV] [காட்சி. I

இடம்—மதுரையின் புறத்திலுள்ள முனிவராச்சிரமமும், மதுரை மாநகரும்.

காலம்—விடியற்காலம்

பாத்திரர்— கௌவுந்தி, கண்ணகி, கோவலன், மாடலன், மாதரி

கோவலன்:—(கௌந்தியை நோக்கி) அம்மையே! எவ்வளவு காலத்திற்கு நானும் கண்ணகியும் இந்த ஆச்சிரமத்தில் இருந்து கொண்டிருப்பது? நான் நகருட்சென்று நாங்கள் வசிப்பதற்குத் தகுதியான வீடு ஒன்று பார்த்து வருகிறேன்! நான் சென்று திரும்பும் வரையில் என் கண்மணி கண்ணகியை ஜாக்கிரதையுடன் பார்த்துக் கொள்ளுங்கள்! அடியேனுக்கும் போக விடை தாருங்கள்! (என்று அன்புடனும் பணிவுடனும் கேட்கிறான்.)

கௌந்தி:—கோவலா! நீ சென்று வாலாம்! கண்மணியை இமை காத்துவருவதுபோல் நான் உன் கண்மணியைக் காத்து வருவேன்! அவளைக்குறித்து நீ கவலையுற வேண்டாம்! சந்தோஷத்துடன் சென்று விரைவில் திரும்பிவிடு!

கோவலன்:—ஆஹா! சந்தோஷம்! (அவ்விடத்தைவிட்டு நீங்கி இரண்டொரு அடி எடுத்து வைக்கிறான்.)

கண்ணகி:—(கோவலனை அழைத்து) நாதா! நகருக்குப்போய்த் திரும்பிவிட்டீர்களோ?

கோவலன்:—(சிரித்துக் கொண்டு) கண்மணி! மதுரைமாநகரைச்சுற்றித் திரும்புவதென்றால் இவ்வளவு சீக்கிரத்தில் முடியுமா? ஸ்ரீராமனுடன் காட்டுக்குச் செல்லும்பொருட்டுப் புறப்பட்ட சீதா தேவி அயோத்தி நகரின் கோட்டை வாயிலைத் தாண்டுவதற்குள் "நாதா; காட்டுக்கு வந்துவிட்டோமா?" என்று ஸ்ரீராமனைக் கேட்டது போலன்றோ விருக்கிறது நீ என்னைக் கேட்பது! கண்மணி! விடைகொடு! நான் சென்று சீக்கிரத்தில் திரும்பி விடுகிறேன்! (கண்ணகியைத் தன் மார்பின் மீது அணைத்துக் கொண்டு மிகுந்த பரிவுடன் கேட்கிறான்.)

கண்ணகி:—நாதா! சீக்கிரம் சென்று திரும்பி விடுங்கள்! வருஷத்தை நிமிஷமாகச்செய்யும் நீங்கள், நிமிஷத்தை வருஷமாகச் செய்து என் மனத்தை வருத்தக்கூடாது! ஞாபக மிருக்கட்டும்! (கோவலனை அணைத்து முத்தமிடுகிறாள்.)

கோவலன்:—ஆருயிரே! அப்படியே! நான்சென்று ஒரு நொடிப்பொழுதில் திரும்பி விடுகிறேன்! நீ ஒன்றுக்கும் அஞ்சவேண்டாம்! தவத்திற் சிறந்த கௌந்தியடிகள் உன்னோடிருக்கும்போது உனக்கு யாது கவலை? (கண்ணகியிடம் விடை பெற்று முனிவராச்சிரமத்தை விட்டு நீங்குகிறான்.)

கண்ணகி:—[கோவலனுடைய உருவம் மறையும் வரையில் உற்று நோக்கிப் பின்பு பெருமூச்சுடன்] ஆ! அவர் சென்றால் என்னுயிரும் கூடச் செல்லு

கின்றதே! என்ன காரணம்? [தன்னை நோக்கி] நான் தானா கண்ணகி? நான் தானா மாநாய்கனுடைய மகள்? நான் தானா மாசாத்துவனுடைய மருமகள்? நான் தானா கோவலனுடைய மனைவி? நான் தானா கௌந்தியினுடைய சிஷ்யை? நான் தானா *பெருங்குடியர் குலத்திலுதித்த பெண்? ஆ! இதென்ன ஆச்சரியம்! அப்படியிருந்தால் கோவலன் மதுரையை நோக்கிச்சென்ற பின்பும், அவரை நோக்கி என்னுடைய உயிர் சென்ற பின்பும் என்னுடைய உடல் மட்டும் இவ்விடத்தில் நின்றுவிடக் காரணமென்ன? [சற்று நேரம் மௌனமாயிருந்து] சீ! என்ன மூடத்தனம்? என்னுடைய சுகத்துக்காக வீடு பார்க்கும்படி எனது கணவன் சென்றால் அதற்காக நான் வருத்தப்படுவானேன்? சந்தோஷமன்றோ படவேண்டும்? "பேதமை என்பது மாதர்க்கணிகலம்" என்னும் பழமொழி உண்மை தான் போலும்! இருந்தபோதிலும் அவர் சென்றதைக் கண்டு வருத்தப்பட்டது என்னுடைய குற்றமல்ல! என்னை அவர் வசப்படுத்திய எனது காதலின் குற்றம்! காதலுக்குக் கண்ணில்லையென்று சொல்லுவார்கள்! ஆனாலும் அது மிகத் தெளிவாகவும், நன்றாகவும், பார்க்கக் கூடியதாகவே இருக்கிறதென்று எனக்குத் தோன்றுகிறது! கண்ணிருந்தும் காணமுடியாத அநேக அற்புதங்களை கண்ணற்ற காதல் விளக்கிக் காட்டுகிறதென்றால் அதனுடைய மகிமையை என்னென்று சொல்லுவது! என்னே காதலின் மகிமை! [பாடுகிறாள்.]

"*இம்மை யின்பத்தின் இனிய முதலாய்ச்
செம்மையி னிலகுறுஉஞ் சீரிய காதலே!
அனைத்தையும் தன்வயம் நினைப்பினில் ஆக்குங்
கடவுட் டன்மை கவின்ற பொருளே!
ஆக்கப் படும்பொருள் அல்லா வினைவே!
எக்கற்று நின்றவர்க் செய்திய மருந்தே!
உடையும் ஊணும் நடையுங் குலனும்
ஒவ்வா தாரையும் ஒன்று படுத்துவை;
செவ்வே யன்னார்தங் திணிமன மலர்த்துவை;
தற்செயலாகத் தனித்தெதிர்ப் படுநரை
இச்சை கொளுத்தி இசைவுற அவர்மனந்
தம்மைச் சேர்த்துத் தகைபெற யாப்பை.
அம்மவோ! நின்னாலன்றோ
உலகி னெலாமுறை விலகலின் றொழுகலே?"

* ஸ்ரீமான் வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியின் "தனிப்பாசுரத்தொகை."

கௌந்தி:—(கண்ணகியை நெருங்கிவந்து) கண்ணகி! நீ எவ்வளவு நேரம் இங்கு நின்றுகொண்டிருந்த போதிலும் கோவலன் உன் கண்ணைவிட்டு மறையப்போகிறதில்லை!

கண்ணகி:—என் மனத்தைவிட்டு மறைந்தாலல்லவோ கண்ணை விட்டு அவர் மறைவதற்கு?

கௌந்தி:—ஆதலால்; வா! நாம் ஆச்சிரமத்துக்குள் செல்லலாம்! (இருவரும் ஆச்சிரமத்துள் செல்லுகிறார்கள்.)

கோவலன்:—(மதுரைக்குள் சென்று நகரத்தின் விசேஷங்களைக் கண்டு வர்ணித்துக்கொண்டே ஒவ்வொரு வீதியாய்ச் செல்லுகிறவன் தானாகவே பின் வருமாறு பேசிக்கொள்ளுகிறான்); ஆஹா! இந்தக் காலைப்பொழுதில் இந்த மதுரைமாநகரம் எவ்வளவு அழகாகக் காணப்படுகிறது! சூரியனுடைய வருகையைக் கண்டு உலகத்தோர் சந்தோஷப்படுகிறார்கள் என்று அக்கதிரவனுக்கு முன்னதாக அறிவிக்கும் தூதுவர்களைப்போல் தடாகங்களில் மலிந்துகிடக்கும் தாமரை முகைகள், முகமலர்ந்து ஞாயிறை நோக்கிய வண்ணமாக இருக்கும் காட்சி எவ்வளவு அற்புதமான காட்சி! முப்புரமெரித்த முக்கட் கடவுளாகிய சிவபெருமானின் திருக்கோவிலும், கருடப்பறவையை வாகனமாகக் கொண்ட திருமால் இயமமும், கலப்பையை ஆயுதமாக வலக்கையில் ஏந்திய பலதேவர் இல்லமும், சேவற் கொடியை உயர்த்திப்பிடித்த முருகவேளின் ஆலயமும், இந்த நகரத்துக்கு பிர்மாவின் நான்கு சிரங்களைப்போல் விளங்கி படைத்தற்றொழிலையுடைய நான்முகனின் ஞாபகத்தை மனிதர்களுக்கு உண்டாக்குவது அரியதோர் காட்சியன்றோ? யானைகள் கூட்டங் கூட்டமாய்ச் செல்லுவதற்காகக் கட்டப்பட்டிருக்கும், மதில்வாயில்களும், இந்த மதில்வாயில்களைச்சுற்றிக் காவலுக்காக நியமிக்கப்பட்டிருக்கும் சீனர்களும், துருக்சர்களும் காவல் புரியும் தன்மையும், இந்த நகருக்கே உரிய ஒரு சிறந்த விசேஷம் போலும்! மேற்றிசைக்காற்று மெல்லென வீசுவதிர், உயர்ந்த மாளிகைகளில் தூக்கிக்கட்டப்பட்டிருக்கும் கொடிகள் அக்காற்றின் அசைவால், சிற்றிடை மாதர்களின் இடைகளைப்போல் துவண்டு துவண்டு அசைவதும், அம்மாளிகைகளில் உறையும் பொதுமகளிர் தாம் காதலிக்குஞ் செல்வத்தையுடைய காமுகரோடு கூடி இடையறாது பெருகும் வையை

ஆற்றில் நீராடுவதும், குளிர்ந்த முல்லை மலரையும், தாழ்ந்த தடாகங்களில் பூத்த குவளை மலரையும், மல்லிகையின் முகைகளையும், செழுங்கழுநீர்ப் புஷ்பத்தின் இதழ்களையும் கலந்து கலந்து மாலையாகச் செய்து கழுத்தில் அணிந்துகொண்டும் தலையில் சூடிக்கொண்டும் குலஸ்திரீகள் தங்கள் கணவர்களோடு சொக்கநாதர் ஆலயத்திற்குப் பத்தியுடன் செல்லுவதும் பார்ப்பவர் மனத்தைப் பற்றியிழுக்கும் இயல்புடையவைகளாயிருக்கின்றன! அங்காடி வீதிகளும், மிக நுட்பமான பருத்தி நூலினாலும், எலிமயிரினாலும், பட்டு நூலினாலும் நெய்யப்பட்ட புடைவை மடிகள் மலைகளைப்போல் நெருக்கமாக அடுக்கப்பட்டிருக்கும் கடை வீதிகளும், நிறுக்கும் துலாக் கோலையும், மறிக்கும் பறையையும், அளக்கும் மரக்காலையும், நடுநிலை திறம்பாத அரசனைப்போல் உபயோகிக்கும் வணிகர்கள் நிறைந்த பலசரக்குக் கடைவீதிகளும், அந்தணர் அரசர் வணிகர் வேளாளரெனச் சொல்லப்பட்டாரிருக்கும் வீதிகளும், சான்றோருறையும் நலங்கிளர் வீதிகளும், காமுகர் உறையும் தாசிகள் வீதிகளும், பறையர்கள் வசிக்கும் புறச்சேரிகளும், என்னுடைய மனத்தைவிட்டு ஒருபோதும் நீங்கமாட்டா! காவிரிப்பூம் பட்டினம் இம்மதுரைமாநகரின் அழகில் நூற்றில் ஒருபங்கு கூட இல்லை என்றே நான் நினைக்கிறேன்! இருக்கட்டும்! நான் ஆலவாயில் அழல் நிறக் கடவுளை அடிபணிந்து விட்டு சீக்கிரம் என் காதலியிடம் செல்லுகிறேன்! அவள் என்னை எதிர்பார்த்துக் கொண்டே யிருப்பாள்! [சொக்கநாதர் ஆலயத்துள் பிரவேசிக்கிறான்.]

கௌந்தி:—(கண்ணகியை நோக்கி) குழந்தாய்! அதோபார்! யாரோ ஒரு பிராமணர் நம்முடைய ஆச்சிரமத்தை நோக்கி வருகிறார்! (தூரத்தில் வரும் ஒரு அந்தணரை சுட்டிக்காட்டுகிறாள்.)

கண்ணகி:—அம்மணி! வந்தால் வரட்டுமே! அவர் வருவதற்கு நாம் எவ்வளவோ புண்ணியஞ் செய்திருக்க வேண்டுமே! வந்த விருந்தினரை உபசரித்தனுப்ப வேண்டியது கோவலன் மனைவியாகிய எனக்குக் கடமையன்றோ? இதோ அவர் சமீபத்தில் வந்துவிட்டார்! நான் அவரை எதிர் சென்று அழைத்து வருகிறேன் (வெளியே செல்லுகிறாள்.)

மாடலன்:—(தனக்குள்) யாரோ ஒரு தற்பாசி நம்மை நோக்கி வருகின்றாளே! சற்று நின்று பார்ப்போம்! (ஆச்சிரமத்துக்கு சமீபத்திலுள்ள ஒரு மரத்தின் நிழலில் தங்குகிறார்.)

கண்ணகி:—(மாடலனை நெருங்கி) சுவாமி! நமஸ்காரம்! இதோ இருக்கும் ஆச்சிரமத்திற்குத் தாங்கள் வந்துவிட்டுப் போகவேண்டும்! (நமஸ்கரிக்கிறாள்.)

மாடலன்:—(சந்தோஷத்துடன்) பெண்ணே! உனக்கு எல்லா நலங்களும் உண்டாகட்டும்! நீ இவ்வளவு அன்போடு அழைக்கும்போது வரமாட்டேனென்று நான் சொல்லுவேனா? இதோ வருகின்றேன்! (இருவரும் ஆச்சிரமத்துக்குப் போகிறார்கள்.)

கௌந்தி:—(அந்தணர் வந்ததும் அவரை நோக்கி) அந்தணரே! தம்முடைய வரவு நல்வரவாகட்டும். இதோ இருக்கும் ஆசனத்தில் தயை செய்து எழுந்தருள வேண்டும்! (பக்கத்தில் கிடக்கும் ஒரு இருக்கையைக் காட்டுகிறாள்) தாம் எங்கிருப்பது? தம்முடைய நாமதேயமென்ன? தயைசெய்து சொல்லக் கூடுமோ?

மாடலன்:—முதிர்ந்த தவத்தைபுடைய அடிகளே! காவிரிப்பூம்பட்டினத்துக்குத் தென் மேற்[illegible]லே நான்கு நாழிகை வழிதூரத்திலுள்ள தலைச்[illegible]ங்காடு என்னும் கிராமத்தில் வசிப்பவன் நான்! என்னுடையபெயர் மாடலன்! தென்திசை சென்று கன்னியாகுமரி ஆற்றில் நீராடி அங்குள்ள ஆலயங்களைத் தரிசித்துக்கொண்டு மறுபடியும் நான் என்னுடைய ஜென்ம நாட்டுக்குத் திரும்புகிறேன்!

கோவலன்:—(மதுரை நகரத்தைச் சுற்றிப்பார்த்துவிட்டு ஆச்சிரமத்துக்கு வந்ததும் தன்னுடைய நண்பனாகிய மாடலன் அங்கிருப்பதைக்கண்டு ஆச்சரியத்துடன்) நண்பா! மாடலா! நீ இங்கே எப்படி வந்து சேர்ந்தாய்? உன்னைப்பார்க்க நேரிட்டதே எனக்கு மிகவும் சந்தோஷம்!

மாடலன்:—(கோவலனைத் தழுவிக்கொண்டு) ஆ! பிரிய சிநேகிதா! நீ இங்குவரக் காரணமென்ன? இவர்கள் யார்?

கோவலன்:—விதி யாரை விட்டது? நண்பா! இறந்தோரைப் பிழைக்கச்செய்யும் அமிர்தம் போன்ற இன் சொல்லோடு இதோ இருக்கிறாளே; இவள்தான் என்னுடைய அருமை மனைவி—கண்ணகி! அதோ

இருப்பவர்கள் என்னுடைய குருநாதராகிய கௌந்தியடிகள்! காவிரிப்பூம்பட்டினத்தை விட்டுப் புறப்பட்டு நடந்தே இங்கநு வந்தடைந்தோம்!

மாடலன்:—(மிகுந்த விசனத்தோடு) கோவலா! இல்லற ஒழுக்கத்திலும், கற்பிலும், சிறந்த மாதவி என்னும் உனதருமைத் தாசியின்வயிற்றில் உனக்குப் பிறந்த பெண்குழந்தைக்கு மணிமேகலை என்று நாமகரணஞ் சூட்டியபோது ஏழை எளியவர்களுக்கு செம்பொன் மழையை உனது செங்கையாலே நீ பொழியவில்லையா? அச்சமயத்தில் உன்னிடத்தில் தானம் வாங்குவதற்காக கோலூன்றிக் கொண்டு வந்த ஒரு கிழப்பிராமணரை மதம்பிடித்த யானை தன்னுடைய துதிக்கையால் பிடிக்கப் போனதைக் கண்டு சரேலென்று ஓடி அவரை அந்த யானை வாயிலகப்படாமல் இரட்சித்ததுமன்றி அந்த யானை மஸ்தகத்திலேறி அதனுடைய மதத்தை யடக்கிய அஞ்சாத வீரனல்லவா நீ? ஒரு பார்ப்பனி வளர்த்த கீரிப்பிள்ளை அவளுடைய பிள்ளையைக் காத்திருக்க, ஒரு பாம்பு அக்குழந்தையைக்கடிக்க அணுகும்போது அதனைக்கடித்துப் பிள்ளையைக் காப்பாற்றின அக்கீரிப்பிள்ளை வாயில் இரத்தக்குறியுடன் குளத்துக்குச் சென்ற பார்ப்பனியின் வரவை ஆவலுடன் எதிர்பார்த்திருக்க, குழந்தையைக் கடித்து விட்டதென அந்த பிராமணஸ்திரீ தண்ணீர்க்குடத்தைக் அக்கீரியின் மேல்போட்டு அதைக்கொன்று விட்டுப் பிறது உண்மை தெரிந்து பிரலாபித்துக் கொண்டிருந்ததை நீ கண்டு அவளுக்கு வேண்டிய தைரியங்கூறி அவசா புத்தியினால் அவள் செய்தகொலைப்பாவம் நீங்கும் பொருட்டு தருமசாஸ்திரத்தில் சொல்லியிருக்கிறபடி, பிராயச்சித்தம் செய்து தானதருமங்களியற்றுவதற்கு வேண்டுமான பொற்காசுகளை நீ அவளுக்குக் கொடுத்துதவியதோடுகூட அவளுடைய செயலைக்கண்டு கோபித்துக்கொண்டு போய்விட்ட அவளுடைய கணவனையும் நீ அவளிடம் அழைத்து வந்து சேர்க்க வில்லையா? இன்னும் எவ்வளவோ அருமையான காரியங்களை நீ இயற்ற வில்லையா? உனக்கு இத்துன்பம் வருவானேன்?

கண்ணகி:—(அந்தணரை நோக்கி) மாதவப் பெருமானே! தங்களுக்குத்தெரியாத விஷயமும்உண்டோ? முன் ஜென்மங்களில் செய்த வினைப்பயன் யாரைவிட்டது? விதியின் பயனை யார் அறிவார்கள்?

"வினைப்போகமே ஒருதேகங்கண்டாய் வினைதானொழிந்தால்
தினைப்போதளவு நில்லாதுகண்டாய் சிவன்பாதம்நினை
நினைப்போரைமேவு நினையாரைநீங்கு இந்நெறியினின்றால்
உனைப்போலொருவருண்டோ மனமே யெனக்குற்றவரே".

என்று நம்முடைய பெரியோர்கள் அருளிச் செய்திருப்பதைத் தாங்கள் அறியாதவர்களல்லவே? முன் ஜென்மத்தில் செய்யும் வினையின்பயன் இந்த ஜென்மத்தில் அனுபவிக்கப்படுவதில்லை என்று சொன்னால், இந்த ஜென்மத்தில் பிறந்த ஒரு பச்சைக் குழந்தை துன்ப மடைவானேன்? பிறக்கும் குழந்தைகளில் சில எளியவர்களிடம் பிறந்து வறுமை யடைவானேன்? வேறு சில செல்வவான்கள் வீட்டுக்குழந்தைகளாயிருந்து அளவற்ற செல்வத்தையும் சுகத்தையும் அனுபவிப்பானேன்? ஒரு குழந்தை நல்லறிவுடைய தாய் இருப்பானேன்? மற்றொரு குழந்தை தீய அறிவு உடையதாய் இருப்பானேன்? இப்படி உலகத்தில் பலவிதமான பேதங்கள் காணப்படுவதற்கு ஒரு காரணம் இருக்கவேண்டு மல்லவா? காரணமின்றிக் காரியம் உண்டாகாதே! ஆகவே ஆன்மாக்களுக்கு அநாதி முதற்கொண்டே இருந்துவரும் கர்மவினையே காரணமென்பது புலப்படவில்லையா?

"பிறப்பிழிவின்பமோடு பிணிமூப்புச் சாக்காடென்னும்
ஆறுமுன் கருவுட்பட்ட தவ்விதியனுபவத்தால்
ஏறிடு முன்புசெய்த கன்மமிங்கிதனுக்கேறு
தேறுநீ இனிச்செய்கன்ம மேலுடற்சேருமன்றே".

என்னும் ஆன்றோர்வாக்கால் இவ்வுண்மை வெளிப்படுகிறதல்லவா? போன ஜென்மத்தில் செய்தவினை இந்த ஜென்மத்தில் நமக்கு ஞாபகம் இல்லாதது கொண்டே முன்ஜென்மமாவது, முன் வினையாவது கிடையாதென்று சொல்லிவிடுதல் பொருந்தாது. நேற்று உண்ட கறிவகைகள் இன்று ஞாபக மில்லாதபோது முன் ஜென்மவினைகள் எப்படி ஞாபக மிருக்கும்? குழந்தைப்பருவத்தில் செய்த செய்கைகளை மறந்துவிட்ட ஒருவன் அவைகள் ஞாபக மில்லாதது கொண்டு "நான் குழந்தைப்பருவத்தில் இருந்ததே இல்லை" என்று சொல்லுவானா? ஆதலால், அந்தணரே! முன்ஜென்மவினையே எனக்கும் என் கணவருக்கும் இவ்விதம் வந்து மூண்டது!

மாடலன்:—குழந்தாய்! நீ சொல்லுவது வாஸ்தவமே! உன்னுடைய பொறுமையும், புத்திசாலித்தனமும், தைரியமும், அன்பும், கோவலனை எவ்விதமான துன்பத்திலிருந்தும் நீக்கிவிடும்! உன்னுடைய வாழ்நாள் சிறப்பதாக!

கோவலன்:—மாடலா! எல்லாம் உன்போன்ற பிராமணர்களின் ஆசிர்வாதத்தையும், கடவுளுடைய அனுக்கிரகத்தையும் பொறுத்திருக்கின்றன. காவிரிப் பூம்பட்டினத்தில் எல்லோரும் க்ஷேமந்தானா? கண் மணி மாதவி சுகமாயிருக்கின்றாளா?

மாடலன்:—கோவலா! எல்லோரும் க்ஷேமந்தான்! மாதவி சௌக்கியமாய்த் தானிருக்கிறாள்; ஆனால் சுகமாயில்லை! அவள் நன்றாய்த் தானிருக்கிறாள்; ஆனால் சந்தோஷமாயில்லை! அவள் தைரியமாய்த்தானிருக்கிறாள்; ஆனால் கவலையற்றில்லை! வீட்டை விட்டு அவள் வெளியே வருவதேயில்லை! மகாராஜா ஒரு கச்சேரிக்குக் கூப்பிட்டனுப்பினார்! அதற்குக் கூட அவள் வரவில்லை! உன்னுடைய ஞாபகமே அவளுக்கு இருந்து கொண்டிருக்கிறது.

கோவலன்:—ஆ! அப்படியா! நீ காவிரிப்பூம்பட்டினம் சென்றவுடன் அவளைப் போய்ப்பார்த்து அவளுக்கு வேண்டிய தேறுதல் சொல்லு! குழந்தை மணிமேகலையை ஜாக்கிரதையாய்ப் பார்த்துக் கொள்ளச் சொல்லு!

மாடலன்:—அதற்கென்ன! அப்படியே சொல்லுகிறேன்! நீ இந்த ஆச்சிரமத்திலிருப்பது சரியல்ல!

கோவலன்:—நண்பா! நீ சொல்லுவது நியாயந்தான்! இல்லறத்திலிருக்கும் நாங்கள் துறவிகள் வசிக்கும் ஆச்சிரமங்களில் இருப்பது கொஞ்சமும் சரியல்ல! அதை உத்தேசித்துத் தான் நகரத்தில் ஒருவீடு பார்த்து வாலாமென்று போயிருந்தேன்!

கண்ணகி:—பிராணேசா! அதோ ஒரு ஸ்திரீ நம்து கௌந்தியடிகளைத் தேடி வந்திருக்கிறாள்!

கோவலன்:—ஆச்சிரமத்துள் அழைத்து வா! கௌந்தியடிகள் உள்ளே இருக்கிறார்கள்! அவர்களிடத்திலும் சங்கதியைத் தெரிவி!

கண்ணகி:—அப்படியே! [வெளியே சென்று மாதரியைக் கூப்பிட்டுக் கொண்டு உள்ளே வருகிறாள்.]

கௌந்தி:—மாதரி! வரவேண்டும்! எது இவ்வளவு தூரம்!

மாதரி:—அம்மணி! தயிர்விற்று விட்டு இப்பொழுதுதான் மதுரைக்குப் போகிறேன்! மாட்டுக்கு வைக்கோல் இல்லை; தவிடு இல்லை; நாழியோ பதினைந்தாகிவிட்டது! உங்களைத் தரிசித்துப் போகலாமென வந்தேன்!

கௌந்தி:—மிகவும் சந்தோஷம்! (கண்ணகியைக் காட்டி) இவளுக்கும் இவள் புருஷனுக்கும் வசிப்பதற்கு மதுரையில் ஒரு வீடுபார்த்துக் கொடுக்க முடியுமா?

மாதரி:—வீடு பார்ப்பதென்ன! என்னுடைய வீட்டிலேயே இருக்கட்டும்! இவர்களுக்கு வேண்டிய சகல உபசாரங்களும் நான் செய்யக் காத்துக் கொண்டிருக்கிறேன்! (கண்ணகியைத் தழுவிக் கொண்டு) குழந்தாய்! என்னுடைய வீட்டிலிருக்க உனக்குச் சம்மதந்தானே?

கண்ணகி:—(நாணத்தினால் தலை கவிழ்ந்தபடியே புன்சிரிப்புடன்) அவர்களுக்குச் சம்மதமானால் எனக்கும் சம்மதந்தான்! அவர்களைக் கேளுங்கள்! (கோவலனைக் காட்டுகிறாள்.)

கோவலன்:—எனக்குச் சம்மதந்தான்!

கண்ணகி:—ஆனால் எனக்கும் சம்மதமே!

மாதரி:—மிகுந்த சந்தோஷம்! (கௌந்தியை நோக்கி) அம்மணி! என்னோடு அனுப்புங்கள்! என்னுடைய சொந்தக் குழந்தைகளைப்போல் இவர்களை நான் பார்த்துக் கொள்ளுகிறேன்!

கௌந்தி:—மாதரி! இந்தக்கண்ணகி கற்பினிற் சிறந்த காரிகை! புருஷனைத் தெய்வமெனக் கொள்ளும் மங்கையர் திலகம்! கஷ்டம் இன்னதென்று கனவிலும் அறியாதவள்! அறிவிற் சிறந்த அணங்கு! ஆதலால் அவளைப்பற்றி நீ அதிகமான கவலை எடுத்துக் கொள்ளவேண்டும்!

மாதரி:—அப்படியே!

கௌந்தி:—(இருவரையும் நோக்கி) குழந்தைகாள்! மாதரியோடு சென்று சுகமாய் இருங்கள்! (வாழ்த்துகிறாள்.)

கோவலன்:—அப்படியே! (நமஸ்கரிக்கிறான்.)

கண்ணகி:—அம்மணி! போய் வருகிறோம் விடைதரவேண்டும்! (நமஸ்கரித்த பின்பு, கோவலன் மாதரி சகிதம் ஆச்சிரமத்தை விட்டு நீங்குகிறாள்).

[4-ம் அங்கம் 1-ம் காட்சி முற்றும்]

நாகை ஸி. கோபாலகிருஷ்ணன்.

———:-:———

## Sketches for Children.

### (1) Sita-Manonmani—a Dialogue.

### சீதா-மனோன்மணி.

பூனையைப்பற்றிய ஓர் ஸம்பாஷணை.

சீதா:—மனோன்மணி! நாம் இன்று பூனையைப்பற்றிச் சற்று நேரம் ஸம்பாஷிப்போமா?

மனோன்மணி:—ஆஹா! அவ்வாறே செய்வொம், எல்லாவற்றிற்கும் ஸந்தேகம் வந்தால் நிவர்த்தி செய்து கொள்ள பூனை பக்கத்திலிருந்தால் நலமல்லவா?

சீதா:—ஆமாம், நீ சொல்வதும் வாஸ்தவந் தான். பூனையைப்பற்றி நீ ஒன்று சொல்ல நான் ஒன்று சொல்லில் நமது வாக்கு வாதத்தைத் தீர்க்க நமது அருமை உபாத்தினி யம்மையும் இவ்விடமில்லையல்லவா! ஓர் பூனை நேராக விருக்கின், நாமே நமது சந்தேஹங்களை நிவர்த்தி செய்து கொள்ளல் இயலுமல்லவா? சரி, நீ போய் நமது வெள்ளைப்பூனையைக் கொண்டு வருகிறாயாவென, மனோன்மணியும் சென்று பூனையுடன் திரும்பி வருகிறாள்.

சீதா:—ஸரி! பூனைதான் வந்து விட்டதே! நாம் நமது உபாத்தினி சொல்லியவாறு கிரமேண அதன் அங்க அவயவங்களைப் பற்றி ஆராய்ச்சி செய்வோம்! முதலில் அதன்கால்கள் எவ்வாறிருக்கின்றன வென்று பார்ப்போம். எங்கே அதன் ஒரு பாதத்தை இப்படிக்காட்டு என்று வினவி அதைத் தொட்டுப் பார்த்து, சரி பூனைக்குக் கால்கள் மிருதுவான மெத்தை போன்ற சதைவளர்ச்சியுடன் கூடி யிருக்கின்றன. இதுதான் நாம் முதலில் பூனையைப் பற்றித் தெரிந்து கொண்ட விஷயம்.

மனோன்மணி:—சரிதான்; நாம் அனேகந் தடவைகள் பூனை எலியைப் பிடிப்பதைப் பார்திருக்கிறோம்; பந்துடன் விளையாடினதையும் பார்த்திருக்கிறோம். ஆயினும் அச்சமயங்களில் கவனித்துப் பார்த்திராததால் இப்பொழுது ஓர் பந்தை உருட்டு இப்பூனை அதை எப்படி இந்த மொண்ணைக்காலுடன் பிடிக்கிறதென்பதைப் பார்ப்போம், என, சீதா பந்தொன்றை நிலத்தில் உருட்ட, மனோன்மணி பூனையைக் கீழே விட்டதும் அதுவும் ஓர் பாச்சலாய்ப் பாய்ந்து அதைப் பிடித்தது.

சீதா:—சரிதான்! நீ இதன் கால்கள் மொண்ணைக் கால்கள் என்றனையே! பார் இப்பொழுது! இதன் முன் பின் கால்கள் ஒவ்வொன்றிலும் அவ்வைந்து வளைந்த நகங்கள் இருக்கின்றனவே! இவைகள் முதல் முதல் நாம் பார்த்த பொழுது காணோ மல்லவா? இப்பொழுது எங்கிருந்து வந்தனவோ?

மனோன்மணி:—எங்கிருந்து வரும்? வெளியிலிருந்தா வரும்! இப்பூனைகளுக்குத் தங்கள் நகங்களை இஷ்டம்போல் உள்ளிழுத்துக் கொள்ளவும், எதையாவது பிராண்ட வேண்டுமென்றாலும், பிடிக்க வேண்டுமென்றாலும் மரம் முதலியவைகளைத் தொத்தி ஏறவேண்டு மென்றாலும் வெளியில் நீட்டவும் சக்தியுண்டென்று தெரியவருகிறது.

சீதா:—ஆமாம்: இக்கூரிய வளைந்த நகங்கள் தாம் மேற்கூறிய வாறு அதற்குதவி யாகிறது. அதன் பாதத் தடியில் மெத்தைபோன்ற சதை வளர்ச்சிக்கும் ஏதாவது உபயோக மிருக்கலாமோ?

மனோன்மணி:—ஆஹா! உதவி யில்லாமல் ஒன்றும் ஈசனால் உண்டாக்கப்பட மாட்டாது! நமக்கதன் உதவி இன்னதென்று தெரியாததனால் தானே உதவியற்றதென்று நிர்ணயித்தல் கூடாது! "அவன் பூனைபோல் வந்து நின்றான்" என்னும் பேச்சைக் கேட்டிருக்கிறோம் அல்லவா? அவ்வசனத்திற்குக் காரண பூதமானது இம்மெத்தை போன்ற பாதத் தடிகளே! இவைகளினால் தான் பூனை கொஞ்சங்கூட சத்தமின்

றி நடந்து, சிறிய ஜந்துக்களின் பின்னால்போய், திடீரென்று பாய்ந்து, வாயினால் கௌவியோ அல்லது தனது கூரியவளைந்த நகங்களாலேயோ அவைகளை ஓடிப்போக விடாமல் பிடித்துக் கொள்ளும்.

மனோன்மணி:—சரிதான்; "ஸர்வஸ்ய காத்திரஸ்ய சிரப்பிரதானம்" என்று நாம் கேட்டிருப்பதால், இப்பொழுது இதன் தலையைப்பற்றி ஆராய்ச்சி செய்வோம்.

சீதா:—தலையிலும் "ஸர்வேந்திரியாணாம் நயனம் பிரதானம்" என்றிருப்பதால் முதல் முதல் அதன் கண்களைப்பற்றி விசாரிப்போமே!

மனோன்மணி.—சரி! அப்படியாயின் அப்பூனையை வெளிச்சம் கண்களில் படும்படி இக்கதவினிடமாகப்பிடி; பார் இப்பொழுது இதன் கண்களை; கண்கள் இருப்பதாகவே காணோமே! அவைகள் இருந்த விடங்களில் இரண்டு கோடுகள் இருப்பதாக வல்லவோ காண்கிறது! இதனால் நாம் தெரிந்து கொள்வதென்னவென்றால் பூனைக்கு வெளிச்சம் ஆகாதென்பதல்லவா?

சீதா:—ஆமாம்! ஆனால் இருட்டுப் பக்கம் அம்முகத்தைத் திருப்பு! பார் இப்பொழுது! கோடாய் இருந்த கண்கள் வட்டமானவைகளாய் ஆய்விட்டன! வெளிச்சமாயின் பூனை தன் கண்களை அநேகமாய் முற்றிலும் மூடிக் கொள்கிறது, இருட்டி லானால் நன்றாய்த் திறந்து கொள்கிறது. பூனைக்கு இரவில் கண் நன்கு தெரியுமென்பதும் வாஸ்தவமே!

மனோன்மணி:—சரி! அதன் வாயைத்திற; பற்கள் எப்படி யிருக்கின்றனவென்று பார்ப்போம்! சரி! அவைகள் நீண்டும் கூராயு மிருக்கின்றன; முன் பக்கங்களில் நான்கு நீண்ட பற்களிருக்கின்றனவே ஒழிய நம்போல கடைவாய்ப் பற்களையே காணோமே!

சீதா:—இப்பற்களின் அமைப்பினின்றும், கடைவாய்ப் பற்கள் இல்லாத தனின்றும் நாம் தெரிந்து கொள்ளும் விஷயம் யாதோ?

மனோன்மணி:—நாம் இரண்டு விஷயங்கள் இதினின்றும் தெரிந்து கொள்ளல் கூடும்; ஒன்று, மேற்கூறிய கூரிய பற்கள் பூனை எலி முதலியவைகளைக் கொன்றதும், அவைகளை நார் நாராய்க் கிழித்துத் தின்ன அமைக்கப் பட்டிருக்கிறதென்பதும், பூனை நம்போலும் பசுமுதலிய பிராணிகளைப்போலும் அசைபோடுதல் முடியாதென்பதுமே.

சீதா:—ஆம்! இதன் நாக்கைப் பார்த்தாயா! எவ்வளவு சொர சொரப்பாயும், ஈரப்பின்றியு மிருக்கிறது? இது மாத்திரம் இப்பொழுது என் கையை நக்கிராவிடில் இவ்விஷயம் எனக்குத் தெரிந்தே யிராதே! இதன் நாக்கு மாத்திரம் ஏன் இப்படி ஏற்பட்டிருக்க வேண்டும்?

மனோன்மணி:—ஏன! சொல்கிறேன் கேள். எலும்புகளில் ஒட்டிக் கொண்டிருக்கும் மாமிசத்தைச் சுரண்டித் தின்ன இச்சொர சொரப்பு அநுகூலமாகிறது. தவிர தன் மயிரை சுத்தம் செய்து கொள்ளவும் அனுகூலம்; தவிர கொஞ்சம் பால் ஓர் தட்டிலவை! இது நக்கிக் குடிக்கும் பொழுது பார்த்தாயா! நாக்கை கரண்டி முட்டைபோல் மடித்துப் பாலை உட்கொள்ளும் ஆச்சரியத்தை; இதற்கும் அவ்வித அமைப்பு அனுகூலமே!

சீதா:—இதன் மயிரைப்பார்! எல்லாம் பின்புறமாகவே சாய்ந்திருக்கிறது தவிர அது மிக்க அடர்த்தியாயும் மிருதுவாயு மிருக்கிறது. நாம் இதைத் தடவிக் கொடுத்தல் முன் பக்கமிருந்து பின் பக்கமாகத்தடவ வேண்டுமொழிய பின்னிருந்து முன்னால் கூடாது. இம்மயிரின் அமைப்பு கூரையின் மேல் போட்டுள்ள வைக்கோலுக் கல்லவோ ஒப்பிட்டுச்சொல்லலாகும் போலிருக்கிறது!

மனோன்மணி:—ஆம்! பார் இப்பொழுது இப்பூனையை! அதன்மேல் விழுந்த ஒரு சொட்டுப் பாலை எவ்வாறு துடைக்கிற தென்பதை! மற்றப் பிராணிகளைப் போலில்லாமல் தன் தேக

த்தை மிக்க சுத்தமாய் வைத்துக் கொள்வதல்லவோ இது; தவிர, பூனை ஜலத்தில் நீந்தியதை எப்போதாகிலும் பார்த்திருக்கிறாயா?

சீதா:—அவ்வளவு தூரம் போவானேன்! பூனைக்கு ஜலத்தைக் கண்டால் வெறுப்பென்பது எல்லோருக்கும் தெரிந்தது தானே! கீழே கொஞ்சம் ஜலத்தை இறைத்து அதன்மேல் இப்பூனையை நடக்கச்செய் பார்க்கலாம்! முடியாது. இதை உத்தேசித்துத் தான் "பூனைக்கு மீன் மேல் பிரியம், ஆனால் அதற்காகத் தன் காலை நனைக்க மிக அப்பிரியம்" என்ற இங்கிலீஷ் பழமொழி ஒன்று உண்டாயிருக்கிறது! இதெல்லாமிருக்கட்டும்; இதற்கு முகத்திலுள்ள நீண்ட மயிர்களால் ஏதேனும் பிரயோஜனம் உண்டோ?

மனோன்மணி:—உண்டு. நாம் ஓர் இருட்டறையில் ஏதாவதொன்றை எடுக்கவேண்டினால் தடவிப்பார்க்க எவ்வாறு கைகளை உபயோகிக்கிறோமோ அவ்வாறு புதர், வளை முதலியவைகளில் புகும்பொழுது, இம்மயிர்கள் உபயோகமாகின்றன.

சீதா:—முடிவில் பூனை சாகபக்ஷிணியா? அல்லது மாமிசபக்ஷிணியா?

மனோன்மணி:—இதைப்பற்றிச் சந்தேகமேன்! அது மாமிசபக்ஷிணியே! எப்படியெனில் அது குருவி, எலி, அணில் முதலியவைகளைப் பிடித்துத் தின்பதை நாம் பார்த்திருக்கிறோம்! தவிர, அதன் பற்களின் அமைப்பும் மாமிசத்தைக் கிழித்துத் தின்னத்தக்கதாய் அமைந்திருக்கிருக்கின்றனவல்லவா?

சீதா:—ஸரி! நாம் ஏதாவது தெரிந்துகொள்ளக்கூடிய முக்கிய விஷயத்தை விட்டிருக்கிறதாய்க் காண்கிறதா?

மனோன்மணி:—எனக்குத் தெரிந்தவரையில் ஒன்றிருக்கிறதாய் அபிப்பிராயம். ஆனால் தெரிந்துகொள்ளக் கூடியவைகள் அநேகம் விட்டிருக்கலாம்.

சீதா:—ஏதோ ஒன்றிருப்பதாய்ச் சொன்னையே அதென்னவோ?

மனோன்மணி:—அது தான் பூனை ஏன் ஜலத்தைக்கண்டால் நடுங்குகிறதென்பது.

சீதா:—அதெவ்வாறென்பதைச் சற்று விரித்துரைப்பாயா?

மனோன்மணி:—ஆஹா! நீ பறவைகளின் இறகுகள் பார்த்திருக்கிறாயா?

சீதா:—பார்த்திருக்கிறேன்.

மனோன்மணி:—அவைகளில் ஜலம் பட்டால் என்னவாகிறது.

சீதா:—ஜலம் ஒட்டுகிறதில்லை! தெறித்துப் போகிறது.

மனோன்மணி:—அதற்குக் காரணம் தெரியுமா?

சீதா:—ஓர்வித இயற்கையான தைலம் அச்சிறகில் இருப்பதால் என்று நம் உபாத்தினி அம்மணி சொல்லியிருப்பது ஞாபகம் வருகிறது.

மனோன்மணி அப்பேர்ப்பட்ட தைலம் அனேக பிராணிகளின் மயிரில் இருக்கும் ஜாஸ்தியாகவோ அல்லது கொஞ்சமாகவோ. ஆனால் பூனையின் மயிரில் கிஞ்சித்தேனும் அத்தைலமில்லை. ஆதலால், ஜலம் மேற்பட்டால் வெயில் அல்லது உஷ்ணம் பட்டாலன்றி காய்ந்து போக ஹேஷியமின்மையாலும், குளிரை ஸகிக்கக்கூடிய பிராணி அல்லாததாலும் தான் அது அவ்வாறு ஜலத்தை வெறுப்பது.

சீதா:—ஆஹா! அப்படியா! நாம் இன்று வெகு ஸங்கதிகள் பூனையைப்பற்றித் தெரிந்து கொண்டோம். இன்னொருநாள் வேறு ஏதாவதொரு பிராணியைப்பற்றி ஆராய்ச்சி செய்ய வேண்டும். நேரமாய்விட்டதால் நாம் இப்பொழுது போவோமா வென, இருவரும் போகின்றார்கள். அடுத்த சஞ்சிகையில் அவர்களது அடுத்த ஸம்பாஷணையை வரைவோம்.

எம். என். கணேசய்யர்.

## Easy Lessons in Economics.

### குடிவாழ்க்கை.

### VI. இலாபம்



லம், முதல், முயற்சி இம்மூன்றினால் உற்பத்தியாகும் திரவியத்தில் வேலைசெய்வோரடையும் பாகத்தைக் கூலியென்கிறோம். முதலாளிக்குச் செலவான பொருள் வட்டியுடன் வரவேண்டும். வேலை செய்கிறவனுக்குக் கூலி கிடைக்கவேண்டும். இவைகளுக்குமேல் கிடைக்கப்பட்ட பாகத்தையே இலாபமெனத்தகும். எத்தேசத்திலும் முதலாளி வேறு, வேலைக்காரர் வேறு, என்று இருக்கின்றமையாலும், முதலாளி தன் முதலினின்றும் தன்னிடத்திலமர்ந்துள்ள வேலைக்காரருக்குக் கூலிகொடுப்பது வழக்கமாயிருப்பதாலும், கூலியை முதலின் ஓர் பாகமெனக் கூறுவதுண்டு. இது நியாயமன்று. கூலி முதலாகாது. திரவிய உற்பத்திக்கு வேண்டிய வேலைக்காரர்கள் வேலை செய்து திரவியம் விர்த்தியானபின் அதினின்றும் ஒருபாகத்தைப் பெறலாம். ஆதலின் முதலாளி கூலிக்காக ஒரு முதல் வைத்துக்கொள்ளவேண்டிய அவசியமில்லை. திரவிய விர்த்திக்கு வேண்டியது வேலை; அந்த வேலைக்கு ஈட்டை திரவிய விர்த்தியானபின் கொடுக்கலாம். அப்படி பெற்றுக் கொள்ளத்தக்கதான நிலைமை நம் தேசத்திலுள்ள கூலிக்காரர்களுக்கு இல்லை. முதலாளிகள் அவர்களை அந்நிலைமையில் வைக்கவில்லையென்று கூறினாலும் தகும். சுகமாகத் தான் ஜீவிக்கிறதற்கு வேண்டிய அளவுக்குக் குறைர்த கூலிக்கு வெலை செய்வோனொருவன் வேலை செய்யான் என்னலாகுமா? அவ்வளவு கூலியை முதலாளி அவனுக்குக் கொடாவிட்டால் அவனுடைய மெய்வலி குறையும். மெய்வலிகுன்ற அவனுடைய வேலைத் திறமையும் குன்றும். அவ்வேலையினால் உற்பத்தியாகும் தனத்தின் அளவும் குன்றும்.

உற்பத்தியாகும் தனமென்பதில், முதலுக்கு வட்டி, வேலைக்குக்கூலி, இலாபமென மூன்று வகைப்படுகிறது. முதலாளிகள் தாங்கள் போடும் முதலுக்கு வட்டியை ஒருவாறு நிர்ணயப்படுத்திக்கொள்கிறார்களென்பதில் தடையில்லை. ஆனால் திரவிய உற்பத்திக்கு முக்கிய காரணமாகிய வேலைக்குக் கூலியை நிர்ணயப்படுத்த சக்தியில்லாதவர்களாக இருக்கிறார்கள். எப்படியென்றால், இலாபத்தை அதிகமாகக் கருதியோ முதலுக்கு அதிக வட்டியை திட்டப்படுத்தியோ, வேலைக்குக் கொடுபடவேண்டிய கூலியைக் குறைத்துவிடுகிறார்கள். இப்படிச் செய்வதால் இலாபம் என்ற கலத்தில் பூஜ்யம் ஏற்படுவதுமன்றி முதலுக்கு உத்தேசித்தவட்டி கிடையாமற் போவதுமல்லாமல், போட்டமுதலுக்கும் நஷ்டமுண்டாகின்றது.

ஒருவரிடத்திலுள்ள முதலானது, அல்லது பல பேரிடத்திலுள்ள முதலானது ஒரு தொழிலில் அமர்ந்து, தொழிற்சாலையாகவும், கருவிகளாகவும், தொழில் விருத்திக்குரிய பண்டங்களாகவும் நின்று வேலைக்காரர்களுக்கு உதவி செய்யும். முதல் பெருகப்பெருக வேலைக்கு வேண்டிய கருவி, யந்திரம் முதலிய சாதகப் பொருள்களை முன்னிருந்ததைவிட சிரேஷ்டமானவைகளாக வாங்கலாம். இப்படி செய்வதால் வருவாயும் அதிகப்படும். வருவாய் அதிகப்படும்பொழுது அதில் வேலைக்காரர்களுடைய கூலி விகிதமும் அதிகப்படவேண்டும். முதலாளியின் முதல் அதிகப்படும்பொழுது வட்டி என்னப்படும் முதலாளியின் வரும்படி குறையவேண்டியது. எப்படியென்றால் ஒரு சாவுகார் மற்றொருவனுக்கு 25 ரூபாய் கடன் கொடுப்பதாயிருந்தால் 100-க்கு இரண்டு ரூபாய்

வீதம் வட்டி கேட்கிறான். அதே சாவுகார் மற்றொருவனுக்கு 100—ரூபாய் கடன் கொடுக்கும்பொழுது 100-க்கு ஒரு ரூபாய் வட்டி கேட்கிறான். 1000 ரூபாய் கொடுப்பதாயிருந்தால் 100-க்கு அரை ரூபாய் கேட்கிறான். பத்தாயிரமானால் 100-க்கு கால் ரூபாய் வீதமும் அதற்கும் குறைவாகவும் பெறுகிறான். அதாவது தொகை அதிகப்படுவதற்குத் தக்கபடி வட்டி வீதம் குறையவேண்டியது. நியாயம், அப்படி இருக்க, தொழில் ஆரம்பத்தில் 1000-ரூபாய் முதல் வைத்தவர் முதலை அதிகப்படுத்துகிறவரை, முதலில் தீர்மானித்த வட்டியாகிய 100-க்கு ஒரு ரூபாய் கணக்கிட்டு எடுத்துக்கொள்ளுவது கிரமம். அந்த முதல்தானே 10,000-மாக பெருகிவிட்டபொழுது அதே பிரகாரம் 100-க்கு ஒரு ரூபாய் வீதம் கணக்கிட்டு எடுத்துக்கொள்ளுவீது அடாது.

ஆகவே மொத்த வரும்படியில் முதலாளியின் வீதம் முதல் அதிகப்படுவதற்குத் தகுந்த வீதமாய்க் குறைவதும் பெருகுவதும் நியாயமாகும். ஆகையால் தேசத்தில் உள்ள முதல் விருத்தியடைவதினால் வேலைக்காரர்களுக்கு நன்மை விளையவேண்டும்.

வேலை செய்வோர் வேலையைக் குழப்பிக் கெடுத்தால் தங்களுக்கு நீடித்த காலத்திற்கு வேலை கிடைக்குமென்று எண்ணி முதலாளிகளுக்கு நஷ்டத்தை யுண்டாக்குவது சகஜம். இது பெரும்பிழை. வேலையை ஊக்கத்துடன் செய்து எவ்வளவுக்கு வரும்படியுண்டாகும்படி செய்கின்றனரோ அவ்வளவுக்கு வேலைக்காரர்களுக்கே நன்மையைப் பயப்பதாயிருக்கிறது. ஐந்து நாளையில் செய்து முடிக்கக்கூடிய வேலையை பத்துநாளில் முடித்தால், அச்சமயத்திற்கு முதலாளிக்கு நஷ்டமும், வேலைக்காரனுக்கு இலாபம்போலவும் தோற்றும். அதாவது முடிந்த வேலையினாலுண்டாகிய பொருள் 10-ரூபாயானால், ஐந்து நாளில் முடித்த வேலைக்காரனுக்கு 4 ரூபாயும், முதலுக்கு ஈடு 4 ரூபாயும், முதலாளிக்கு இலாபம் இரண்டு ரூபாயுமாகப் பிரிவதாக வைத்துக்கொள்ளுவோம். ஐந்து நாள் வேலையை பத்து நாளைக்கு ஓட்டிவிடுவதினால், வேலைக்காரனுக்கு ரூபாய் எட்டு கிடைக்கலாம். ஆனால் முதலாளிக்கு நஷ்டமுண்டாகுமாதலால் அந்த வேலைக்காரனை அம்முதலாளி பின்னும் தன்னிடம் வைத்துக்கொள்ள சம்மதியானென்பது திண்ணம். மறுபடியும் அமைக்கப்பட்ட வேறு வேலையாட்களும் அத்தன்மையராயின் முதலாளி தன் முதலை அம்மாதிரி நஷ்டம் விளைக்கும் தொழிலினின்றும் விலக்குவானென்பதில் தடை யுண்டோ? இவ்விதம் பலமுதலாளிகள் தங்கள் முதலை தொழில்களினின்றும் விலக்கிக் கொள்வாராயின், தேசமொத்தத்தில் தொழில்களிலமர்ந்துள்ள முதலானது குறையவே குறையும். முதல் குறையவே செல்வ விருத்திக்கு முதலால் அமையும் உதவியும் குன்றும். செல்வத்தை விருத்தி செய்ய முதலாளியின் உதவியின்மையால் வேலை செய்வோர்களால் தொழிலை நடத்த இயலாது. இவ்விதமாக வேலையை குழப்புகிற வேலையாட்கள் தங்களுக்கும் தங்கள் நிலைமையிலுள்ள பிறருக்கும் நஷ்டத்தையே உண்டாக்குகிறார்கள். முதலாளிகள் தங்களிடம் வேலைசெய்கிற கூலிக்காரர்களுக்குத் தகுந்த கூலிகொடாமலிருப்பது தேசத்திற்கே பெருத்த நஷ்டமாய் முடிந்திருக்கின்றது.

சென்னை மாகாணத்தைச் சேர்ந்த வியவசாய இலாகா டைரக்டர் வியவசாய வகுப்பாரின் நிலைமையைப் பற்றியும் வேலையாட்களின் நிலைமையைப்பற்றியும், இவ்விருவர்களுக்கு முள்ள சம்பந்தத்தைப் பற்றியும் சில முக்கியமான அபிப்பிராயங்களை சென்ற வருஷத்து ரிபோர்ட்டில் வெளியிட்டிருக்கிறார். அவருடைய அபிப்பிராயங்களை ரிவின்யூ போர்டாரும் அங்கீகரித்திருக்கிறார்கள். அவை யென்னவென்றால்,—"வியவசாய வகுப்பாரின் நிலைமை எங்

கும் குறையாமல் உயர்ந்தே இருக்கின்றது. அதற்குத் தற்சாலம் விலைவாசிகள் ஏறியிருப்பது காரணம். கூலிவேலை செய்வோர் விவசாயத்தில் தக்க கூலி கிடைக்காமலிருப்பதால், சிலோன் மலேயா நாடுகள் போன்ற அந்நிய தேசங்களுக்குப்போய் விடுகிறார்கள். வேலையாட்கள் இல்லாவிட்டால் வியவ்சாயம் நடப்பதற்குக்கஷ்டமேற்பட்டுப் போகாமையால் மிராசுதாரர்கள் தங்கள் கீழ் வேலைசெய்யும் கூலியாட்களுக்கு அவர்களுடைய சுகஜீவனத்திற்குப் போதும்படி கூலி விகிதங்களை உயர்த்திக் கொடுத்தாலன்றி, இன்னும் சிறிது காலத்திற்குள் வியவசாயத்திற்கு வேண்டிய ஆட்கள் கிடையாமற் போய்விடுவார்கள்."

இப்படி வியவசாய டயரக்டர் கூறுவதுமன்றி, வேலையாட்களுக்கு வியவசாயத்தில் வருஷமுழுவதும் வேலை கிடைப்பதில்லை யென்றும், ஜீவனத்திற்குத் தக்கபடி கூலியகப்படுவதில்லை யென்றும், ஆகையால் வேலையாட்கள் காப்பி, தேயிலை, ரப்பர் முதலியனவைகள் பயிர் செய்யப்படு மிடங்களுக்குப் போய் விடுகிறார்களென்றும், சென்றவருஷம் முதல் ஆறுமாத காலத்தில் மட்டும் 50,000 கூலியாட்கள் இலங்கைக்கு மட்டும் போயிருக்கிறார்களென்றும், பினங்கு, சிங்கப்பூர் முதலிய விடங்களுக்கு 32,000 கூலியாட்கள் சென்றார்களென்றும் கூறுகிறார். தென்னாப்பிரிக்கா முதலிய விடங்களுக்கு எவ்வளவு பேர் சென்றார்களோ தெரியவில்லை. வியவசாய டயரக்டர் கூறியது வியவசாயத்திற்கு மட்டுமென்று சொல்லமுடியாது. ஒவ்வொரு தொழிலுக்கும் அமையும்.

ஆகவே, முதலாளிகள் தங்கள் கீழ்வேலை செய்யும் கூலியாட்களும் ஜீவனத்திற்குத் தக்கபடி கூலிகொடாமல் வருத்துவதனாலேயே பல முதலாளிகளுக்கு பெருத்த நஷ்டமும், வேலையாட்களுக்கு அந்நிய தேசவாசமும், சுதேசத்திற்குப் பெருத்த நஷ்டமுமுண்டாகின்றது. பெருத்த முதல் வைத்து தொழில் நடத்துவோரும், பெரிய மிராசுதாரர்களும் இதை கவனிக்காமலிருந்தால் நாளாவட்டத்தில் அது அவர்களுக்கு மன்றி தேசத்திற்கே பெருங்கேடாக விளையும்.

டி. சி. வேங்கடரமண அய்யர்.

---

## Sita-A Tale of Hindu Domestic Life.

## சீதா அல்லது இல்லறவாழ்க்கை.

32-வது அதிகாரம்.



மீன்தார் இராமச்சந்திரய்யரை என்ன செய்யலாமென்று சமயம் பார்த்துக்கொண்டே இருந்தார். இராமச்சந்திரய்யர் தான் பிடித்த காரியத்தை ஜயித்து விட்டதைப்பற்றி சந்தோஷப்பட்டுக்கொண்டிருந்தார். உடனே கோவில் வேலையை ஆரம்பம் செய்யவேண்டுமென்று தீர்மானித்தார். அன்றைய தினம் ஆருத்ராதரிசனம், ஆகையால் இராமச்சந்திரய்யர் அதுதான் தகுந்த தினமென்று வேலையை ஆரம்பிக்கச் சொன்னார். ஆருத்ரா தரிசனத்துக்கென்று தனியாக அபிஷேகம் சுவாமிக்குச் செய்ய வேண்டுமென்று இராமச்சந்திரய்யர் முதல்நாளே சாமான்களையெல்லாம் சேகரித்து வைத்திருந்தார். இராமச்சந்திரய்யர் பிள்ளைக்கு அன்றைக்கு வெகு நேர்த்தியாய் சிங்காரம் செய்து இராமச்சந்திரய்யர் பரிசாரகன் அவ்விடம் கொண்டுவந்தான். இராமச்சந்திரய்யர் அவனைப்பார்த்து வெகு சந்தோஷப்பட்டுக்கொண்டு சீதா ஏன் இன்னும் வரவில்லை, என்ன செய்கிறாளென்று கேட்டார். பரிசாரகன் தூங்குகிறாளென்றான். அதோ சுவாமி வரப்போகிறதே இன்னுமா தூங்குகிறாள்?

சீக்கிரம் வரச்சொல் என்றார். அன்றையதினம் சுவாமி விடிந்த உடனே புறப்பட்டு விட்டது. ஊரில் வீட்டுக்குவீடு வாசலில் கோலம் போட்டிருந்தது. ஒருவராவது வீட்டிற்குள்ளிருக்கவில்லை. எல்லோரும் வெளியில் வந்து சுவாமி தரிசனத்துக்கு காத்துகொண்டிருந்தார்கள். அந்த ஊருக்கு புதிதாய் வந்த ஓர் மலையாளி தன் தாயாரைக் கூப்பிட்டான். அவள்உள்ளே இருந்தாள். உடனே அவன் பலமாக 'அம்மா அம்மா இன்னிக்கு அருத்த தருசனமென்று உனக்கு தெரியாதா? எழவு வாகனம் வருகிறது; சீக்கிரம் வா வா' என்றான். அவள் உடனே ஓடிவந்து 'என்ன என்ன' என்றாள். அவன் பழையபடி முன்போலவே சொன்னான். எல்லோரும்கேட்டு சிரித்துவிட்டு அவனை திருத்தினார்கள்; அவனுக்கு ஒன்றும் தெரியவில்லை. சுவாமி புறப்பட்டுத் தெருவில் வரும்போது வியாபாரிகள் வெகு பேர் வந்திருந்தார்கள். சுவாமிக்கு முன் பக்தி வாய்ந்தவள் போல் ஓர் தாசி ஒரு அடி எடுத்து வைப்பதற்குள் பத்து குலுக்கு குலுக்கிக் கொண்டுபோனாள். வைதீகர்களெல்லாம் பஞ்சாதியை வாயால் சொல்லி கண்ணை தாசிமீது வைத்துக்கொண்டு போனார்கள். நல்ல மரத்தில் புல்லுருவிபாய்வதுபோல் கோவிலில் பக்தி வரவேண்டிய இடத்தில் இருக்கிற சொல்ப பக்தியையும் தாசிமீது வைத்து செலுத்துவதற்காக அவளுக்குச் சம்பளம் கொடுத்து வைத்திருக்கிறார்கள். சுவாமிக்கு தாசி எதற்கோ தெரியவில்லை. அப்படியாவது வேசித்தொழில் இல்லாமல் குடித்தன ஸ்திரீ போல் இருக்கும் தாசியைத் தான் கோவிலுக்கு வைப்பதென்று ஏற்பாடு செய்கிறார்களா? அதுவுமில்லை. தாசியுடன் நாகசுரமும் புறப்பட்டது. தவுல்காரன் தெருவுமுழுவதும் பிசாசு ஆடுவது போல் ஆடிக்கொண்டே தவுல் அடித்தான். நாகசுரக்காரன் பக்கத்திலிருப்பவர்களுடைய காதை இடைவிடாமல் துளைத்தான். நமது பாலக்காட்டான் சுவாமி தரிசனத்தோடு நிற்கவில்லை. வியாபாரமும் கொஞ்சம் செய்யவேண்டுமென்று பக்ஷணக் கடையில் புகுந்தான். அங்கே போனதும் பக்ஷணக்கடைக்காரனைபார்த்து இதெல்லாம் என்ன விலையென்றான். இவன் கேட்ட கேள்வியிலேயே இவன் முட்டாளென்று கண்டுகொண்ட பக்ஷண கடைக்காரன் சில ஊசிப்போன வடைகளை கொடுத்தான். அவன் வாங்கி விண்டுபார்க்க, அதில் நூல் போல் இழைந்தது. இதைக்கண்ட மலையாளி அது கெட்ட பதார்த்தமென்று நினையாமல் அவனுடைய சாமர்த்தியத்தை மெச்சி வடைதான் செய்தாய் நூல் எப்படி நூற்றாய் என்று கேட்டான். எல்லோரும் இதைக்கேட்டு அவனைக் கேலிசெய்தார்கள். இராமச்சந்திரய்யர் சுவாமி வந்த சமயத்திலும் சீதாவுக்கு சொல்லியனுப்பினார். காணோம்; சுவாமி போன பிறகு சீதாவின் உள்ளே போய் பார்த்தார். உள் தாள் போட்டிருந்தது. வெகு நாழிகை இடித்தார். திறக்கபடவில்லை; பிறகு கதவைப்பெயர்த்து வைக்கச் சொன்னார். பெயர்த்து வைத்தும் உள்ளே சீதாவைக் காணோம். இராமச்சந்திரய்யர் வீட்டிலெல்லாம் தேடிப்பார்த்தார்: எங்கேயும் காணோம். பிறகு ஊர் முழுவதும் தேடும்படி ஆள் அனுப்பினார். எங்கே தேடிப்பார்த்தும் அகப்படவில்லை. உடனே இராமச்சந்திரய்யர் பூலாவடி கிராமத்திற்கு தந்தி கொடுத்தார். அங்கேயும் அவர்கள் இல்லையென்று மறு தந்திகொடுத்துவிட்டு இது விஷயம் விபரமாக விசாரிக்கும்பொருட்டு இராமச்சந்திரய்யருடைய மாமனார் மாமியார் இருவரும் வந்து சேர்ந்தார்கள். எங்கே பார்த்தாலும் அகப்படவில்லை. ஜமீன்தார் இதுதான் சமயம் என்று கண்டு இராமச்சந்திரய்யர் தன் பெண்சாதியைக் கொலைசெய்துவிட்டாரென்று கட்டுகட்டிவிட்டார். வெங்கட்டராம சாஸ்திரிகள் பிள்ளை முத்துசாமி இதுதான் சமயமென்றுகண்டு, எனக்கு முன்னமேயே தெரியும். படிப்பு படிப்பு என்று படிக்கிறார்களே, படித்தபெண் எல்லோரும் அசலாத்து சேஷனை

கூட்டிக்கொண்டுதான் ஓடிப்போய்விடுகிருர்கள். இவளும் அப்படித்தான் ஓடிப்போய்விட்டாளென்று அவதூறு பேசினன். இராமச்சந்திரய்யர் ஒன்றும்செய்யத் தோன்ருமல் தன் பெண்சாதியின் சமாசாரத்தை சொல்பவர்களுக்கு ஐந்நூறு ரூபாய் இனம் தருவதாக கெஜட்டில் விளம்பரப்படுத்தினர். இப்படியிருக்க அந்த ஊரில் இராமச்சந்திரய்யர் பெண்சாதி காணமல்போனதினத்துக்குமுதல்நாள் ஓர் பிரேதம் நதியில் மிதந்துவந்தது. கிராமமுனிசிப் பார்த்துவிட்டு அதை ஒருவருக்கும்தெரியாமல் புதைத்துவிட்டார். தெய்வசிகாமணி முதலியார் இதுதான் சமயமென்று கண்டு கிராம முனிசிப்புக்கு லஞ்சம் கொடுத்து போலீஸாரை வரவழைக்கவும் ரிபோர்ட்டெழுதவும் ஏற்பாடு செய்தார். கிராம முனிசிப்புக்கும் இராமச்சந்திரய்யருக்கும்விரோதம்; அவன் உடனே சீதாகாணமல் போனதையும் இராமச்சந்திரய்யர்மீது சந்தேகத்தையும் ரிபோர்ட்டு செய்தனுப்பினன். இதற்குள் போலீசாரும் வந்தார்கள். தெய்வசிகாமணி முதலியாருக்கு கேட்கவும் வேண்டுமோ? போலீசாருக்கு ஆசார உபசாரம் செய்தார். கலெக்டருக்குகூட அந்த உபசாரம் நடக்காது. போலீசாருக்கும் ஜமீன்தார் தகுந்த சம்மானம் கொடுத்துவிட்டார். உடனே கிராமமுனிசீப்பு போலீசார்எல்லோரும் சேர்ந்து இரண்டு மூன்று பொய்ச்சாக்ஷிகளை தயார்செய்து அவர்கள் காண்பித்ததுபோல் முன் புதைக்கப்பட்ட பிரேதத்தை எடுத்தார்கள். இப்படியிருக்க அன்றையதினம் தற்செயலாய் திருச்சினப்பள்ளி டாக்டர் ப்ருன்சல் வந்திருந்தார். அவர் வந்ததும் ஜமீன்தார் அவருக்கும் தகுந்த 'சப்ளை' செய்ய ஏற்பாடுசெய்தார். இராமச்சந்திரய்யர் போலீசாருடன் பேசவந்தவர் அவர்களுடன் பேசிவிட்டு டாக்டரை லட்சியம் செய்யாமல் போய்விட்டார். டாக்டருக்கு இராமச்சந்திரய்யர் மீது கோபம் வந்துவிட்டது. இதுதான் சமயமென்றுகண்டு ஜமீன்தார் அந்த டாக்டரை சர்டிபிகேட்டு கொடுக்கும்படி கேட்டார். டாக்டர் அந்த கோபத்தில் அது ஒரு பெண்ணின் பிரேதமென்றும் வயது இருபது இருக்கலாமென்றும், அப்பெண் கொலை செய்யப்பட்டு இறந்திருக்கிறளென்றும், சர்ட்டிபிகேட்டு கொடுத்தார். போலீசார் இதையெல்லாம் வைத்துக்கொண்டு இராமச்சந்திரய்யரைப் பிடிக்கிறதென்று போனர்கள். இராமச்சந்திரய்யர் இது சங்கதி தெரிந்துகொண்டு ரகசியமாக பட்டணம் போய்விட்டார். பட்டணத்தில்போய் பாரிஸ்டர் காடன் துரையைப்பார்த்து அவரை நேரே கூட்டிக்கொண்டு கலெக்டரிடம் போய்ச் சேர்ந்தார். கலெக்டரிடம் காடன்துரை ரொம்ப ஓடியாடி இராமச்சந்திரஅய்யரை ஜாமீன்பேரில் விடுதலை செய்யும்படி ஏற்பாடு செய்தார். பிறகு இராமச்சந்திரய்யர் விசாரணை கலெக்டரிடம் நடந்தது. ஊரில் இருந்து கிராமமுனிசிப்பு,தெய்வசிகாமணி முதலியார் முத்துசாமிய்யர் போலீசாரெல்லோரும் சாக்ஷியாக வந்தார்கள். ஒவ்வொருவரும் தான் நேரில் கொலை நடந்ததைப் பார்த்ததாக சொன்னர்கள். ஆனல் இராமச்சந்திரய்யர் என் தன் பெண்சாதியைக் கொலை செய்யவேண்டுமென்பதற்கு ஒரு காரணமும் சர்க்காரால் சொல்ல முடியவில்லை. மேலும் பேபரில் அவளைப்பற்றி தெரிவிப்பவர்களுக்கு ஐந்நூறு ரூபாய் இனம் தருவதாக இராமச்சந்திரய்யர் ஏன் எழுதவேண்டும் என்று கலெக்டர் சந்தேகித்து இராமச்சந்திரய்யரை ஸெஷன்ஸ் விசாரணையிலும் ஜாமீன் பேரில்தான் விடவேண்டு மென்றும் ஸெஷனுக்கு கமிட் செய்யப்பட்டதென்றும் உத்தரவு செய்தார். உடனே இராமச்சந்திரய்யர் முன்னைவிட அதிகபணம்கொடுத்து ஸெஷனுக்கும் காடன்துரையேவரவேண்டும்என்றுபேசினர். இராமச்சந்திரய்யர் கொலைக்கேஸ் அந்த ஜில்லாமுழுமையும் தெரிந்துவிட்டது. தெய்வசிகாமணி முதலியார் இதில் தன் பணத்தை பணமாகப்பார்க்கவில்லை. சாக்ஷிகள் ஒவ்வொருவனுக்கும் பணம் இஷ்டம்போல்கொடுத்தார். இராமச்சந்திரய்யர் கேஸ் விசாரணையென்று கோர்ட்

டில் வெகுகூட்டம் வந்திருந்தது. ஒருவருக்கும் மூச்சுவிடக்கூட இடமில்லை; காடன் துரை வரப் போகிறார் என்றதை கேட்கவும் அநேகர் கூட் டம் கூட்டமாகக்கூடினார்கள். காடன் துரை கேஸ்கள் விசாரிப்பதில் வெகு பெயர்போன வர்; அவரை சென்னை ராஜதானி முழுவதும் கூப்பிடுவார்கள். கோர்ட்டு கூடப்போகிறதற்கு ஒருமணி முந்தியே எல்லாக் கூட்டங்களும் விட்டது. பதினொரு மணி அடிக்கவும் எல்லோ ரும் காடன்துரை வரவை எதிர்பார்த்திருக்க காடனுக்கு பதிலாக வேறு சிறுபிள்ளை முகத் தில் மீசைகூட இல்லாதவனாக வந்து நின்றார். ஜனங்களுக்கெல்லாம் இவ்வளவுதானா என்று ஆகிவிட்டது. இராமச்சந்திரய்யனை ஜட்ஜி தனி யாக உட்காரச்சொன்னார். புதிதாய் வந்தவர் ஓர் கடிதத்தை துரையிடம் கொடுத்தார். அதில் காடன்துரைக்கு வர சரிப்படவில்லையென்றும் ஆனால் தன்னைப்பார்க்கிலும் வந்த வக்கீல் வெகு நன்றாய் கேஸை நடத்துவாரென்றும், அவர் சிறுபிள்ளையென்று மனதிற் கவலைப்பட வேண்டாமென்றும் எழுதியிருந்தார். உடனே கேஸ் ஆரம்பிக்கப்பட்டது. வாதி பக்கத்திற்காக நாராயணசாமி அய்யர் பப்ளிக் பிராசிகூடர் கேஸ் நடத்தினார். தெய்வசிகாமணி முதலியார் கேஸுக்கு முதல் சாக்ஷியாக வந்தார். அவர் கொலை நடந்த ராத்திரி பூவரசநல்லூரில் இருந் ததாகவும் கூச்சல் கேட்டுத்தான் ஓடிப்போய்ப் பார்த்ததாகவும் இராமச்சந்திரய்யர் சீதாவு டையகழுத்தை அழுத்திகொண்டிருந்ததாகவும், பிறகு வேண்டாமென்று தான் சொல்லிவிட்டுப் போய் விட்டதாகவும் சொன்னார். கிராம முனி சிப் அசட்டாளமணியய்யர் தெய்வசிகாமணி முதலியார் திரும்பிவந்தபோது தான் எதிரில் போனதாகவும் இராமச்சந்திரய்யர் ஓர் கத்தி யை வைத்துக்கொண்டிருந்ததாகவும், அதால் சீதாமீது இரண்டு காயம் உண்டுபண்ணினதாக வும் கொலை அவர்தான் செய்ததென்றும் சொன் னார். டாக்டர் சர்ட்டிபிகேட்டை சரிதானென்று ருசுசெய்தார். போலீசார்கள் தாங்கள் ஊரில் விசாரித்த விபரங்களையெல்லாம் சொன்னார்கள். பஞ்சாங்கம் சேஷய்யா என்பவர் ஒருவர் வாதி பக்கத்திற்கு கடைசி சாக்ஷியாக விசாரிக்கப்பட் டார். இவருக்கு யாரோ ஒருவர் வெள்ளைக்காரர் முன் போனால் தலையில் ஏதாவது முக்கியமாக கட்டிக்கொண்டு போகவேண்டுமென்று சொல்லி வைத்தார். அவருக்கு பெருத்த தொந்தி போட் டிருந்தது. வேஷ்டியில் ஏக கிழிசல்களும் அதில் தையல்களும் போட்டிருந்தது. அதை மடித்து மடித்துக்கட்டியிருந்தார். வேஷ்டியை என்ன தூக்கிக்கட்டியும் அது தொங்கிக் கீழே வந்து விட்டது. மேலூர்க்கு ஒரு பழய கந்தைதான் கொண்டுவந்திருந்தபடியால் அந்தக்கந்தையை கோர்ட்டாருக்கு மரியாதையாக தலையில் கட்டி கொண்டுவிட்டார். மேலுக்கு துணி ஒன்று மில்லை. கோர்ட்டிற்குள் வந்ததும் வெஷ்டியைத் தொங்கவிட்டு கட்டிக்கொள்வது மரியாதை யல்லவென்று அதையும் மேலே தூக்கி சொரு கிக் கொண்டார். இவர் கோர்ட்டில் நுழைந்து பெட்டியில் ஏறினதும் எல்லோரும் இவரைப் பார்த்து கொல்லென்று சிரித்தார்கள். உடனே கோர்ட்டார் அவரை வேஷ்டியைக் கீழேதொங் கவிடச் சொல்லித் தலை வேஷ்டியை மேலே போட்டுத் தொந்தியை மூடச்சொன்னார். பப் ளிக் பிராசிகூட்டர் நாராயணசாமியய்யர் கேள்வி கேட்கவும் அவருக்கு ஒன்றும் காதில் படவி ல்லை. பிறகு அவர் செவிடென்று தெரிந்துகொ ண்டு நாராயணசாமியய்யர் அவர் பக்கத்தில்போ ய்க்கேட்டார். அவர், தானும் கூச்சல் கேட்டுப் போனதாகவும் போய் பார்த்தபோது இராமச் சந்திரய்யர் சீதாவை அடித்துக்கொண்டிருந்த தாகவும் சொன்னார். நாராயணசாமியய்யர் எப்படி ஐயா அடித்தார் என்றார். கிழவர் உடனே அவர் தோளில்ஓர் அடி அடித்து 'இப்படித்தான் அடித் தார்' என்றார். கோர்ட்டில்எல்லோரும் சிரித்தார் கள். கோர்ட்டார் அவர் கூச்சல் போட்டதைப் பார்த்துக் கோபித்துக்கொண்டு ஓய் 'ஏன் கழு

தைபோல்கனைக்கிறீர்' என்றார். சாஸ்திரிகள் ஒன்றும் சொல்லாமல், பிறகுதான் இராமச்சந்திரய்யருக்குச் சமாதானம் சொன்னதாகவும், அவர் கேட்கவில்லையென்றும் சொன்னார். இதற்குள் ஓர் கழுதை வெளியில் கத்திற்று. கோர்ட்டார் ப்யூனைக்கூப்பிட்டு அதுஎன்ன சப்தமென்றார். சாஸ்திரிகள் அது எனக்குத் தெரியும் என்றார். கோர்ட்டார் என்னவென்று கேட்க அது கோர்ட்டாருடைய பிரதித்வனி என்றார். இதைக் கேட்டு எல்லோரும் சிரித்தார்கள், கோர்ட்டார் கோபித்துக்கொண்டு உம்மை என் தண்டிக்கக் கூடாதென்றார். சாஸ்திரிகள் நீங்கள் என்னைக் கழுதை என்று சொல்ல வில்லையா? கோர்ட்டார் மட்டும் செய்யலாமென்று எந்த சட்டத்தில் சொல்லியிருக்கிறதுஎன்றார். பிறகு புதுவக்கில் எல்லா சாக்ஷிகளையும் நீங்கள் நேரில் இராமச்சந்திரய்யர் பெண்சாதியைக் கொன்றதை பார்த்தீர்களாஎன்றுகேட்டார். ஒவ்வொருவரும் நேரில் பார்த்தேன் என்றான். மறுபடி வக்கீல் அவர்பிணத்தைப் புதைத்ததைப் பார்த்தீர்களா வென்று கேட்டார். அவர்கள் பிரத்தியக்ஷமாய்ப் பார்த்தோம் என்றார்கள். வக்கில் மறுபடி இப்போது டாக்டர் சர்டிபிகேட் கொடுத்த பிணமும் நீங்கள் சோதனைபோட்டு எடுத்த பிணமும் சீதாவின் பிணமா என்று கேட்டார். சாக்ஷிகள் சீதாவுடையது தான் என்றார்கள். நீங்கள் உங்கள்ஊரில் அதற்கு இரண்டு நாளைக்குமுன் ஒருஅநாதைப்ரேதத்தைப்புதைத்ததுண்டா என்று கேட்டார். சாக்ஷிகள் இல்லையென்றார்கள். வக்கீல் பிறகு எல்லோரும் இப்போது நான் கேட்டதற்கு சொன்ன பதில் சத்தியமாக நிசமென்று சொல்வீர்களா என்றார். சாக்ஷிகள் சொல்வோம் என்றார்கள். உடனே வக்கீல் தான் டிப்ன்ஸ் ஆரம்பிக்க வேண்டியது தான் என்றார். துரை உம் டிபன்ஸ் என்னவென்று கேட்டார். வக்கீல் என் டிப்ன்ஸ் நான் தான் என்றார். துரை அர்த்தமாகாமல் அது என்னவென்று கேட்க, உடனே வக்கீல் தன் நிஜார் உடுப்பு காப் எல்லாவற்றையும், கழற்றி ஓர் பெண்ணாக நின்றார். இராமச்சந்திரய்யர் கோர்ட் என்றுகூடப்பாராமல் "ஆ சீதா!" என்று சந்தோஷத்தினால்கத்தினார். கோர்ட்டில் எல்லோரும் கைகொட்டிச் சிரித்தார்கள். துரை உடனே வாதி சாக்ஷிகளை யெல்லாம் கூட்டில் ஏற்றி இராமச்சந்திரய்யர் பெண்சாதிசீதா இவள்தானா என்று கேட்டார். எல்லோரும் இவள் தான் என்றார்கள். துரை சீதாவின் சாமர்த்தியத்தைக் கண்டு வெகு ஆச்சரியப்பட்டு உடனே இராமச்சந்திரய்யரை விடுதலை செய்தார். மேலும் இராமச்சந்திரய்யரை அக்கிரமமாகக் கோர்ட்டிற்கு இழுத்ததற்காக கவர்ன்மெண்டார் 1000-ரூபாய் இராமச்சந்திரய்யருக்கு நஷ்டம் கொடுக்க வேண்டுமென்றும், போலீசார் இதில் கிராமமுன்சீப் இடம் சேர்ந்து வேண்டுமென்றே பொய்க்கேஸ் உற்பத்தி செய்திருப்பதால் அவர்களை யெல்லாம் அந்தந்த டிபார்டுமெண்டுக்காரர் உடனே வேலையை விட்டு நீக்கிவிட வேண்டுமென்றும் வாதிபக்ஷம் பொய்ச் சாக்ஷி சொன்னவர்களெல்லாம் பொய்ச்சாக்ஷியம் சொன்னதற்காக விசாரணை செய்யப்பட சாங்ஷன் கொடுத்திருப்பதாகவும், சீக்கிரத்தில் அவர்களை யெல்லாம் விசாரிக்கப்படுமென்றும் உத்தரவு சொன்னார்.

எஸ். இராமஸ்வாமி அய்யர் பி. ஏ.

---

## கமலாம்பாள் சரித்திரம்.

ஒவ்வொருவரும் வைத்து வாசிக்க வேண்டிய தத்துவார்த்தமான ரசம் பொழியும் கதை. கமலாம்பாள் சரித்திரம் 3-வது பதிப்பு: 328 பக்கம் தயாராய்விட்டது. விலை ரூபா 1-4-0 தபாற் செலவு வேறு.

100-க்குக் குறையாமல் வாங்குகிற வியாபாரிகளுக்கு தக்க கமிஷன் கொடுக்கப்படும்.

வேண்டுவோர் மைலாப்பூர் லஸிதாலயத்திலிருக்கும் அ. ப. ஏஜென்ஸி காரியதரிசிக்கு எழுதிக்கொள்ளவும்.